யாது" என்று சொல்வதால் தூங்கும்பொழுது அக்ஞானமிருப்பதாகத் தெரிகிறது. கற்கண்டை சாப்பிடும்பொழுது அதன் இனிப்பு நமக்கு நன்ருகத் தெரிவதுபோல ஸுஷுப்தியில் ஸுகானுபவம் நமக்குத் தெரிவதில்லை.

இதே ஸ்வரூபஸுகானுபவம் நம்மிடம் எப்பொழுதும் இருக்கிறது. ஜாக்ரத்ஸ்வப்னங்களில் விஷயானுபவமிருப்பதால் நம்மிடமுள்ள ஸ்வரூப ஸுகத்தையே, பிறர்கையை எதிர்பார்த்து, மிகுந்த கிலேசத்துடன் பிறரால் அவமதிப்புடன் கொடுக்கப்பட்ட அன்னத்தை சாப்பிடுவதுபோல அனுபவிக்கிருேம். ஸுஷுப்தியில் விஷயமில்லாததால் பிறரை எதிர்பார்க்காமல் ஸ்வாதந்திரியத்துடன் அனுபவிக்கிருேம். ஆனல் இரண்டிலும் அக்ஞானம் பொதுவாக இருக்கிறது. மோக்ஷத்திலோவெனில் மாயை என்ற திரை நீங்கிவிடுவதால் ஸ்வரூபஸுகானுபவம் நன்ருக தெரிகிறது.

இவ்விதமான அஞ்ஞானம் என்ற திரையை நீக்குவது பரமதயாளுவான ஸ்ரீ குரு ஒருவரால்தான் முடியும். ஆதலால் அப்பேற்பட்ட குருவின் கடாக்ஷம் நமக்கு எவ்விதம் எப்பொழுது கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்க வேண்டும். அதற்காக சும்மா இருக்கக்கூடாது. பர்த்ருஹரி சொல்லியபடி என்னவந்தாலும் நியாயவழியிலிருந்து விலகக்கூடாது. "இது செய்யத்தகுந்தது. இது செய்யத்தகாதது என்று நிர்மானிப்பதற்கு சாஸ்திரம்தான் பிரமாணம்"

என்று கீதையில் கூறியுள்ளபடியால் சுருதி ஸ்மிருதி முதலிய சாஸ்திரங்களில் கூறியுள்ளதுதான் நியாய வழி.

இந்த நிலைமையில் இப்பொழுது நம் பாக்யத்தால் பரமகிருபாநிதியான ஸ்ரீ சங்கரபகவத்பாதர் பசியுள்ள குழந்தைக்கு தாயார்போல நமக்கு அநுக்ரஹம் செய்ய விரும்புகிறார் என்று தெரிகிறது. பசியுள்ள சிறு குழந்தையானது பானையிலுள்ள சாதப்பருக்கைகளை தன் விரல்களால் எடுத்து எடுத்து வாயில் கொண்டு போகும்பொழுதே கீழே இறைக்கின்ற நிலைமையைப் பார்த்து தாயார், "ஆஹா! குழந்தைக்கு ரொம்ப பசி எடுத்து விட்டது" என்று எண்ணி பரபரப்புடன் நெய் பருப்புக்கலந்து அன்னத்தை நன்றாகப் பிசைந்து தானே வாயில் ஊட்டுவதுபோல நிரதிசயமான ஆனந்தத்தை அடையும் விருப்பத்தால் அல்பமான ஆனந்தத்தைக் கொடுக்கும் விஷயங்களைத் தேடியலைந்து முயற்சி வீணாகி ஆனந்தம் கிட்டாது வருந்துகின்ற நம்மைப்பார்த்து கிருபை கொண்ட ஆசார்யரும் நிரதிசயானந்தத்தை நம்மை அனுபவிக்கும்படி செய்வதற்காக **தேசிகாஷ்டகம்** என்ற இந்த சிறந்த ஸ்தோத்ரத்தை வெளிப்படுத்தியிருக்கிறார்.

இந்த ஸ்தோத்ரம் ப்ரதி தினமும் ஸேவிக்கின்ற மருந்து மாத்திரை போன்றது. வயிற்றில் அக்னி மாந்த்யம் உள்ளவர்களுக்கு அவ்வித மாத்திரையை நித்யம் சாப்பிடுவதால் நன்கு விரேசனமாகி ஜாடராக்

னிக்கு பலமேற்பட்டு சாப்பாட்டில் ருசியும், ஆரோக்யமும் புஷ்டியும் ஏற்படுவதுபோல தேசிகாஷ்டகத்தை பாராயணம் செய்வதால் பாபம் தொலைந்து ஸ்வதர்மாசரணத்தில் ருசி, பிறகு அனுஷ்டானம், சித்தசுத்தி, முறையே பேரானந்தமும் ஏற்படுகிறது.

நமக்கு ஏற்பட்ட நித்ய நைமித்திக கர்மாக்களை விடாமல் அனுஷ்டித்துக்கொண்டும் ஸ்ரீமதாசார்யாளால் செய்யப்பட்ட ஸ்தோத்திரங்களைப் பாராயணம் செய்து கொண்டுமிருந்தாலேயே இந்தப் பலன் கிடைக்குமே. அதிகப்படியாக இது எதற்காக? என்று கேட்கலாம். ஸ்வதர்மாசரணத்தில் ஸ்வரஸமான ப்ரவிருத்தி இருந்தால் அந்தப்பலன் கிடைக்கும். அதுதான் இந்தக்காலத்தில் இல்லையே. ஸ்வதர்மாசரணத்தில் ருசி ஏற்படுவதற்காகத்தான் சிறந்த ஔஷதம் போன்ற இந்த தேசிகாஷ்டகம் வெளிவந்திருக்கிறது. இந்த தேசிகாஷ்டகத்தை வாசிப்பதில் ருசி ஏற்படவேண்டுமே! அது எப்படி ஏற்படும் என்று கேட்டால், பரமகருணாநிதியான ஸ்ரீ ஸத்குருவின் ஸங்கல்ப விசேஷத்தால்தான் இது நிறைவேறும் என்றுதான் சொல்லவேண்டும். நேரிடையாக ஸ்வதர்மாசரணத்திலேயே நமக்கு ப்ரவிருத்தி ஏற்படும்படியாக அவருக்கு ஸங்கல்பம் ஏற்படட்டுமே என்றால் ஸர்வக்ஞராயும் ஸத்ய ஸங்கல்பராயும் உள்ள ஸ்ரீ ஸத்குருவிற்கு இந்த மாதிரிதான் ஸங்கல்பம் ஏற்படவேண்டுமென்பதை நாம் கட்டுப்படுத்த முடியாது. ஞானத்தைக் கொடுக்கும் குருவை மனிதர்களில்

சிறந்தவர் என்பதாக மட்டும் நினைக்கக்கூடாது. அவரை ஸாக்ஷாத் ஈச்வரனாகவே பாவிக்கவேண்டும். உருவமற்றவராயிருந்தாலும் பரமேசுவரன் பக்தர்களான சிஷ்யர்களைக் காப்பாற்றுவதற்காக மனித உருவம் தாங்கி ஆங்காங்கு ஸஞ்சரிக்கிறார்.

மேலும் சிறு வயது முதற்கொண்டு லோக வியவஹாரங்களில் ஈடுபட்டு காரியங்களைச் செய்வதற்கு வேண்டிய ஞானம் நமக்குத் தானாகவே ஏற்படுவதிலும் பிறர் காரியங்களைச் செய்வதையும் அவர்கள் பேசிக்கொள்வதையும் பார்த்துப் பார்த்துத்தான் நாம் தெரிந்துகொள்கிறோம். இன்ன பதத்திற்கு இன்ன பொருள் என்பதை பிறருடைய உபதேசம் மூலம் தெரிந்துகொள்வதுபோல, அதன் பிறகு அந்தப் பொருள் உண்டாகும் இடம், காலம், அது கிடைக்கும் இடம், காலம் முதலியவற்றையும் அதன் உபயோகத்தையும் பிறர் மூலமாகவே நாம் தெரிந்துகொள்கிறோம். அந்த நமக்கு அறிவையுண்டுபண்ணுமிடங்களிலெல்லாம் குருவின் அம்சம் இருக்கிறது. ஏனெனில் அறியாமையைப் போக்கடிப்பது குரு ஒருவரால் தான் முடியும். குரு என்ற பதத்திற்கே அறியாமையைப் போக்கடிக்கிறவர் என்பதுதான் பொருள். லௌகிகமாகவோ, வைதிகமாகவோ, ஆத்யாத்மிகமாகவோ உள்ள ஞானமெல்லாம் குருவின் மூலம்தான் ஏற்படுகிறது. ப்ரஹ்மா முதல் ஸ்தம்பம் வரையுள்ளதான எல்லாவற்றையும் குரு என்ற பாவனையுடன் வணங்க வேண்டும். எங்கும் குருவின் அம்சமிருக்கிறதென்று

தெரிகிறது. ஆகையால்தான் பழக்கமில்லாத இடத்தில் ஆட்டிடையர்களும் மாட்டிடையர்களும்கூட சரியான வழிகளைக் காட்டுகிறார்கள். அவசியம் விழித்துக் கொண்டிருக்க வேண்டிய சமயத்தில் தூங்கிக்கொண்டிருக்கும் நம்மை ஈ, கொசு முதலியவைகள் கடித்து எழுப்பி உதவி செய்கின்றன.

இவைகளால் தன் அம்சத்தால் எங்கும் இருந்துகொண்டு ஸ்ரீ குருதான் எல்லாகாரியங்களையும் நடத்திவைக்கிறாரென்று கிடைக்கிறது. அப்பேற்பட்ட குரு இந்த காலத்திற்குத் தகுந்தபடி தேசிகாஷ்டகத்தை வெளியிட்டு உபகாரம் செய்கிறார் என்பதும் அது பரம்பரையாக பரமானந்தத்தைக் கொடுக்குமென்பதும் யுக்தம் தான். எந்த குருவின் அனுக்ரஹம் ஏற்பட்டால் அரைநிமிஷத்தில் மோக்ஷம் கிடைக்குமோ, அந்த குரு அனுக்ரஹம் செய்யும் முறை இன்ன விதமாகத் தான் இருக்கும் என்பதை யாரும் தீர்மானித்துக் கூற முடியாது.

இவ்விதம் எல்லாவிதங்களிலும் நமக்கு எப்பொழுதும் பரமோபகாரம் செய்கின்ற குருவை மறக்காமல் எப்பொழுதும் ஸ்மரிக்க வேண்டுமென்பது கூறாமலே விளங்கும். அவரை ஸ்மரித்தால் தான் நாம் நன்றியை காட்டினவர்களாக ஆவோம். இந்த தேசிகாஷ்டகத்தில் அவருடைய மஹிமைகள் ஒவ்வொன்றும் தனித்தனியாக நன்கு காட்டப்பட்டிருப்பதால் குரு ஸ்மரணத்திற்கு இது மிக உபயோகமாயிருக்கும்.

ஆகையால் தினந்தோறும் உபயோகிக்கும் மருந்து போன்றதான இந்த தேசிகாஷ்டகத்தை காலையிலும் மாலையிலும் ஒவ்வொருவரும் படிக்க வேண்டும். மருந்துக்கு அனுபானம் போன்றதான இந்த பூமிகையையும் கட்டாயம் படிக்க வேண்டும். மருந்தைத் தீர்மானிக்கும் வைத்யரேதான் அனுபானத்தையும் தீர்மானிக்கிறார். தேசிகாஷ்டகத்தை வெளிப்படுத்திய ஸ்ரீ குருதான் பூமிகையையும் வெளிப்படுத்தியிருக்கிறார். பூமிகையும் அவருடைய அனுக்ரஹத்தால் ஏற்பட்டது தான். அவருடைய அவதாரம் முதல் ஒவ்வொரு லீலைகளையும் கவனித்தால் நம்முடைய நன்மையைக் கோருபவரென்றும், ஆபத்காலத்தில் உறவினர் போல உதவி செய்பவரென்றும் நிச்சயமாகத் தெரியும்.

இக்காலத்தில் தடையில்லாமல் அதர்மம் எங்கும் பரவி வருவதையும், ஸ்வதர்மத்தில் ப்ரவிருத்தி இல்லாமலிருப்பதையும் நேரில் பார்க்கின்ற ஸ்ரீ குருநாதருக்கு நம்மைக் கைதூக்கிவிட வேண்டுமென்ற ஸங்கல்பம் இருக்கிறது என்பது கௌளி அடிப்பது போன்ற இந்த தேசிகாஷ்டகம் வெளிப்பட்டதால் தெரிகிறது. அவருடைய ஸங்கல்பம் ஒருநாளும் வீணாகாது. அஷ்டமூர்த்தி ஸ்வரூபமான அவரே தேசிகாஷ்டக ரூபமாக ஆவிர்பவித்து பூமிகை என்ற வியாஜமாக தன் உபதேசத்தையும் வெளியிட்டிருக்கிறார். ஆகையால் பூமிகையை நன்றாகப் படித்து அதன் பொருளைத்தான் தெரிந்து கொள்வதுடன் பிறருக்கும் இதை எடுத்துக் கூற வேண்டும். மிக்க ருசியுள்ள பொருளை தான்

ஒருவன் மட்டும் சாப்பிடக்கூடாது என்பது உலக வழக்கமல்லவா. மேலும் வழி தவறிச்செல்லும் குருடனை நல்வழியில் கொண்டு சேர்ப்பதுபோல மிகவும் ஹிதம் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்ட விஷயம் தனக்குத் தெரிந்தால் அதைப் பிறருக்கும் எடுத்துக் கூறவேண்டும்.

மேலும் குழந்தையின் மதுரமான மழலைச் சொற்களைக்கேட்க ஆசைப்படும் தாய் தந்தையர் குழந்தையைப்பேசச் செய்து அதன் மழலைச்சொற்களைக் கேட்டுக்கேட்டு மிகுந்த ஆனந்தமடைவது போல ஸ்ரீமதாசார்யாளும் **தேசிகாஷ்டகம், பூமிகை** என்ற வியாஜமாக நம்மை பேசச்செய்து ஆனந்தமடைகின்றார். ஆகையால் இந்த தேசிகாஷ்டகத்தையும், பூமிகையையும் படித்து அவரை ஸந்தோஷப்படுத்த வேண்டும். அவருடைய ஸந்தோஷத்தால் நாம் ஆத்ம லாபத்தை அடைவோம். அதனால் எப்பொழுதும் நாம் விரும்புகின்ற பயம் கொஞ்சமும் இல்லாத சாச்வதமான ஆனந்தத்தை அடைவோம்.

ப்ரஜைகளுக்கு க்ஷேமம் உண்டாகட்டும். அரசர்கள் நியாயவழியில் பூமியை காப்பாற்றட்டும். பசு பிராஹ்மணர் இவர்களுக்கு எப்பொழுதும் நன்மை உண்டாகட்டும். எல்லா உலகங்களும் ஸுகமாயிருக்கட்டும்.

ஈச்வரோ ரக்ஷது.

ஸ்ரீ சங்கர தீக்ஷிதர்.



॥ श्रीमच्छंकरभगवत्पूज्यपादाः ॥

॥ श्रीगणेशाय नमः ॥

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# ॥ श्रीदेशिकाष्टकम् ॥

## सव्याख्यम् ॥



प्रथमः श्लोकः ।

विश्वदर्पणदृश्यनाममतामुपादिशदादरात्
विश्ववन्दितपादपङ्कजतत्त्वबोधनिदानवित् ।
विश्वदेशिकराजराण्मम मानसे परिवर्ततां
तं गुरुं कृतहन्तृताघनिवृत्तये स्मरतास्तिकाः ॥ १ ॥

व्याख्या

पादुका देशिकेन्द्राणां पातु कान् भवसागरे ।
पातु बालान् या तु दक्षा गुरुपादावनेऽपि सा ॥

देशिकाष्टकमारभमाणः वस्तुनिर्देशरूपं गुरुस्मरणरूपं च मङ्गळमारचयति — विश्वेति । श्रीदक्षिणामूर्तिस्तोत्रे प्रथमश्लोकारम्भे विश्वस्य दर्पणदृश्यमाननगरीतुल्यत्वोपदेशेन मिथ्यात्वं दर्शितं श्रीभगवत्पादैः । अत्रापि प्रथमश्लोकारम्भे तदनुवादेन श्रीभगवत्पादमहिमा वर्ण्यते । विश्वेति लुप्तषष्ठीकं पदम् । दर्पणे

दृश्यता यासां व्यक्तीनां ताः दर्पणदृश्यताः; दर्पणदृश्याः नगर्यादिव्यक्तय इति यावत् । ताभिः समतां विश्वस्योपादिशत् । दक्षिणामूर्त्यष्टके प्रथमश्लोकारम्भ इति शेषः । एवं च तत्रोक्तं विश्वस्य मिथ्यात्वमत्रानूदितं भवति । ननु दक्षिणामूर्तिस्तोत्रारम्भेऽपि कथं मिथ्यात्वप्रदर्शनं कृतं भवतीति चेत् — उच्यते । दर्पणे दृश्यमानाः प्रतिबिम्बाः अवस्तुभूता इत्यत्र नास्ति विवादः । यतः, श्रीविद्यारण्याचार्यैः प्रतिबिम्बानां प्रातिभासिकवस्त्वन्तररूपत्वेन स्वरूपत एव मिथ्यात्वमुक्तम् । विवरणाचार्यैरपि बिम्बस्यैव दर्पणस्थत्वप्रत्यङ्मुखत्वादिरूपेण मिथ्यात्वमुक्तमेव । भवतु प्रतिबिम्बानां मिथ्यात्वं; तत्तुल्यत्वस्य जगति प्रकारान्तरेणापि संभवात् कथं तुल्यत्वोपदेशमात्रेण प्रपञ्चमिथ्यात्वप्रदर्शनं कृतं भवति इति चेत् — उच्यते । तत्र 'निजान्तर्गतं पश्यन्नात्मनि मायया बहिरिव' इत्यादिनाऽनन्तरमस्यैव स्पष्टीकृतत्वात् । प्रपञ्चमिथ्यात्वप्रदर्शनपूर्वकात्मयाथात्म्यप्रदर्शनपरत्वात्तदष्टकस्य । तथा च एवं श्लोकार्थः — यः विश्वदेशिकराजराट् गुरुचक्रवर्ती भगवत्पादरूपः शिष्येषु आदरात् स्नेहेन दक्षिणामूर्तिस्तोत्रारम्भे विश्वस्य मिथ्यात्वमुपादिशत् । किमर्थमारम्भे मिथ्यात्वमुपदिष्टमिति चेत् — आदरात् इति आवर्त्यते । आ समन्तात् दरः भयं यस्मिन् संसारमण्डले तस्मात् संसारमण्डलात् भयस्थानात् । ल्यब्लोपे पञ्चमी । भयस्थानं विहाय्येत्यर्थः । सामर्थ्यात् अभयस्थानमिति लभ्यते । तत् प्रापयितु-

मिति शेषः । तदर्थं वा किमिति मिथ्यात्वोपदेशः कृत इति चेत्, तत्त्वबोधनिदानविन् । श्रीगुरुर्हि भवरोगिणां भिषग्वरः, 'भिषजे भवरोगिणाम्' इत्युक्तत्वात् । लोके हि भिषग्वराः प्रथमं रोगनिदानं निर्णीय तन्निवर्तकं औषधं निश्चिन्वन्ति । निश्चितमपि औषधं तदुपयोगयोग्यतासंपादनपूर्वकमेव ददति । तद्वदेव गुरुरपि करोति । तथाहि—भवरोगस्य निदानं आदिकारणं 'निदानं त्वादिकारणम्' इत्यमरः । मूलकारणं अविद्या । तन्निवर्तिका च अखण्डसाक्षात्काररूपा विद्या । तत्प्राप्तिश्च गुरुमुखश्रवणादिना । तत्र च श्रवणादौ साधनचतुष्टयसंपन्न एवाधिकारी । तत्र च प्रथमसंपादनीयः नित्यानित्यवस्तुविवेकः । नित्यत्वं सत्यत्वं, अनित्यत्वं चासत्यत्वम्; मिथ्यात्वमिति यावत् । तन्निश्चयसत्त्व एव विषयवैराग्यसंभवात् । विरक्तास्येतरस्यैव तीव्रमुमुक्षया गुरूपसदनपूर्वकश्रवणादिना साक्षात्कारसंभवात् । एवं रोगनिदानं तन्निवर्तकनिदानं च विदितवता गुरुणा आदौ प्रपंचमिथ्यात्वमेव खलु उपदेष्टव्यम् । लोके तावत् कादाचित्कानृतवदनज्ञानमात्रेणापि विवेकिनः कदाचिदपि तदीयं वाक्यं विश्वस्य न प्रवर्तन्ते खलु । एवं च सति किमु वक्तव्यं प्रपंचस्वरूपमेव मिथ्येति ज्ञाने जाते विवेकिनः विश्वासेन तत्र न प्रवर्तन्त इति । इत्थमालोच्य गुरुरादौ मिथ्यात्वमुपदिष्टवान् । अत एव विश्वेषां भवरोगिणां वन्दनार्हपादपङ्कजश्च । स चासौ तत्त्वबोधनिदानविच्च । निवर्तकनिदान-

विस्त्वस्योक्तत्वादेव निवर्त्यनिदानविस्त्वमपि अर्थसिद्धम् । तादृशो गुरुः मम मानसे परिवर्ततताम् । प्रार्थनायां लोट् । प्रकारान्तरेणार्थो वर्ण्यते— ममेति भावप्रधानो निर्देशः । ममभाव इत्यर्थः । अयमहंभावस्याप्युपलक्षणम् । शरीरपुत्रमित्रकलत्रादिविषयक-ममाहंभावदूषिते मानसे गुरुराडूविषयकममाहंभावः परिवर्ततता-मित्यर्थः । 'तस्यैवाहं ममैवासौ स एवाहमिति त्रिधा' इत्युक्तेः । तथा च 'मोक्षकारणसामग्र्यां भक्तिरेव गरीयसी' इति वचनानुसारेण गुरुविषयकभक्तिः प्रार्थिता भवति । तादृशभक्ति-प्रतिबन्धकपापनिवृत्तिं प्रार्थयते— तं गुरुमिति । कृतहन्तृता कृतघ्नता तद्रूपं यत् अघं तन्निवृत्तये हे आस्तिकाः तं गुरुं स्मरतेत्यर्थः । कृतघ्नतादोषस्य पापेषु प्रधानत्वात् प्रधानमल्ल-निबर्हणन्यायेन तन्निवृत्त्या सर्वनिवृत्तिः स्यात् इत्यभिप्रायः । बहुविधपापरूपप्रतिबन्धकवतामस्माकं तन्निवर्तकगुरुस्मरणस्य प्राप्त-कालत्वमुक्तं भवति ॥

ஸ்ரீ குருநாதருடைய பாதத்தை (ஆசார்யபாதரை)க் காப்பாற்றுவதிலும் திறமையுள்ள ஸ்ரீ தேசிகேந்த்ரரு டைய பாதுகை ஸம்ஸார (பிறவி)க் கடலில் விழுந்து உழலுகின்ற சிறுவர்களை (அஜ்ஞானிகளை) காப்பாற்றட்டும்.

ஸ்ரீ தேசிகாஷ்டகம் என்ற கிரந்தத்தை ஆரம்பிக் கின்ற கவி ஆரம்பத்தில் குருஸ்மரணரூபமான மங்க ளத்தைச் செய்கிறார் :—

எவர் தக்ஷிணாமூர்த்யஷ்டகம் என்னும் ஸ்தோத்ரத்தின் ஆரம்பத்தில் சிஷ்யர்களிடம் வாத்ஸல்யத்தால் பயத்தைக் கொடுக்கும் பிறவிக்கடலிலிருந்து அவர்களைக் கரையேற்றி பயமேயில்லாத இடத்தை அடைவிப்பதற்காக உலகை கண்ணாடியில் தோன்றும் நகரத்திற்கு ஒப்பாக உபதேசித்தாரோ, அதாவது பிரதிபிம்பம்போல ஜகத்தையும் பொய்யென்று உபதேசித்தாரோ, பிறவிப்பிணியுள்ள எல்லோராலும் வணங்கத்தகுந்த தாமரைபோன்ற பாதங்களையுடையவரும் பிறவிப்பிணியின் மூலகாரணத்தையும் அதைப் போக்கும் தத்வபோதத்தின் காரணத்தையும் நன்கு அறிந்தவருமான அந்த உலகத்திற்கெல்லாம் குருஸார்வபௌமரான ஸ்ரீபகவத்பாதர் என் மனதில் எப்பொழுதும் வஸிக்கட்டும். சரீரம், புத்திரன், நண்பன், மனைவி முதலியவர்களிடம் எனக்கு உள்ள அஹங்காரமமகாரம் தொலைந்து என்னைச் சேர்ந்தவர் குரு என்று குருவிடம் மமகாரம் ஏற்படட்டும். குருபக்தி வளரட்டும். அதற்கு இடையூறு செய்கின்ற பாபங்கள் தொலையட்டும். ஆஸ்திகர்களே, நன்றி மறத்தல் என்ற பாபம் தொலைவதற்காக அந்த குருவை ஸ்மரியுங்கள். ஆசார்யர் ஸம்ஸார ரோகத்தின் மூலகாரணத்தையும் அதைப் போக்கடிக்கும் உபாயத்தையும் நன்கு அறிந்த வைத்யரானதால் மூலகாரணமான ஆசை தொலைந்து வைராக்யம் ஏற்படுவதற்காக முதலில் உலகம் பொய் என்பதை உபதேசித்தார். பொய்யென்று தெரிந்துவிட்டால் பிறகு அதில் ப்ரவர்த்திக்கமாட்டார்கள். இங்கு எல்லா பாபங்களுக்கும் மேல்பட்டதான நன்றிமறத்தல் என்ற

பாபம் குருஸ்மரணத்தால் தொலையும் என்று கூறுவதால் அதற்கு கீழ்ப்பட்ட எல்லா பாபங்களும் தொலையுமென்று சொல்லாமலேயே கிடைக்கிறது.

इति प्रथमः श्लोकः ॥

॥ द्वितीयः श्लोकः ॥

( श्रीशंकरविजये प्रथमसर्गकथा )

प्रायेण सहस्रद्वितयाधिकेषु कल्यब्देष्वतीतेषु बौद्धपाषण्ड-कापालिकादिभिः वैदिकमतदूषकैः ब्राह्मणहिंसकैः स्वमतप्रचारधुरन्धरैः आकुलिते भारतमण्डले देवतानां हविर्भागविधुरतां आस्तिकानां बौद्धाद्युपद्रवासहिष्णुतां केषाञ्चित्तन्मतप्रवेशोन्मुखतां कालविलम्बे उपेक्षितविषवत् दुर्मतस्य शीघ्रप्रसारिताञ्च दृष्ट्वा असहमानेन श्रीनारदमहर्षिणा ब्रह्मलोकं प्राप्य निवेदितं वृत्तान्तं अवगतवता ब्रह्मदेवेन देवगणैस्सह कैलासं प्राप्य भूलोकवृत्तान्तं निवेद्य बौद्धादिनिरसनं प्रार्थितः परमेश्वरः 'स्कन्दः कुमारिलभट्टरूपेण, देवेन्द्रः सुधन्वराजरूपेण, आदिशेषः पतञ्जलिरूपेण च अवतरतु । कर्ममार्गप्रचारानन्तरं ज्ञानमार्गप्रचाराय श्रीशङ्कराचार्यरूपेण अहं अवतरिष्यामि । इतरदेवताः शिष्यरूपेण अवतरन्तु ' इत्याज्ञापयामास ॥

द्वितीयः श्लोकः ।

तदनुसारेण अवतीर्णः सुधन्वा च बौद्धान् लालयन् भट्टपादागमनं प्रतीक्षाञ्चक्रे । अवतीर्णश्च भट्टपादः बौद्धगुरुमेव अपदेशेन उपसृत्य तन्मतरहस्यं विज्ञाय राजसमीपं प्राप्य वादाय व्यवस्थितसभायां बौद्धवादान् शतशः खण्डयामास । तदानीं 'युक्तिपटुत्वावदूकतामात्रेण तन्मतमेव यथाभूतमिति न विस्रम्भणीयं । दिव्यशोधनयैव याथातथ्यं अवसेयम् । अतः गिरिशिखरात्पतनेपि अविनाशिता यस्य तन्मतमेव ग्राह्यम्' इति बौद्धोक्तसुधन्वराजानुमत्या श्रीभट्टपादः 'यदि वेदाः प्रमाणं स्युः, न मे किञ्चिद्भविष्यति' इति वेदमातरमेव शरणीकृत्य गिरिशिखरात्पपात । तस्य च शरीरेऽणुमात्रमपि क्लेशो न बभूव । तदानीं मणिमन्त्रादिकौशलेनापि सम्भावनीयमेतत् इति बौद्धोक्तसुधन्वना 'इदमेव अन्तिमशोधनम्, नातः परं शोधनीयम्' इति कोपेन उद्घोष्य 'घटस्थवस्तुवादिमतमेव सम्यक्, तदन्ये भ्रान्तशिक्षार्हाः' इत्युक्तम् । प्रातस्समागत्य भोगीन्द्रास्तित्वं उक्तवन्तः सौगताः । भोगीन्द्रभोगशायी साक्षात् हरिरेव वर्तते इत्युक्तं भट्टपादैः । तथैव दृष्टम् सर्वैः । निगृहीताश्च बौद्धाः, वर्धिताश्च भट्टपादाः, प्रसारिताश्च कर्ममार्गविस्ताराः, प्रसन्नाश्च दिशः, तृप्ताश्च हविर्भुजः ॥

॥ द्वितीयसर्गकथा ॥

एवं निर्मक्षिकतायां कालट्यभिख्यपुण्याग्रहारे श्रीविद्याधिराजनामधेयभूसुरवरभागधेयभूतेन विधिवदधीतसाङ्गस्वाध्यायेन

श्रीमदार्याम्बापरिचर्यमाणपादकमलेन विविधयज्ञानुष्ठानतोषितदेववृन्देन विविधभोगभाग्यसत्वेऽपि पुत्रभाग्यविरहखिन्नेन शिवगुरुणा सहधर्मचारिणीप्रेरणया संवत्सरकालं वृषाद्रौ सहैव पत्न्या तपस्यता स्वप्ने प्रसन्नात् परमेश्वरात् अभीष्टं वरं प्राप्य गृहमागत्य विधिवत् सन्तर्पणादिना ब्राह्मणाः पूजयाञ्चक्रिरे। भुक्तवतां तृप्तवतां विप्राणां आशीर्भिः अलंकृतस्य तस्य शिवगुरोः विप्रशेषभोजनवेळायां शैवमहःप्रवेशेन तस्मादार्याम्बा गर्भं दधार। श्रीपरमेश्वरप्रवेशसूचकचिह्नानि देवतास्तवनवृषाधिवहननृत्तगीतवाद्यश्रवणरूपाणि बहूनि स्वप्नादिसमये अनुभूतवती च। पूर्णे काले शुभवीक्षिते शुभलग्ने श्रीमदाचार्यं प्रासूत च भाग्यवती॥

॥ तृतीयसर्गकथा ॥

तदवतारसमये च विष्णुः पद्मपादरूपेण पवनः हस्तामलकतोटकरूपेण विधिः सुरेश्वररूपेण एवमितरेऽपि नन्दिकेश्वरवरुणादिदेवाः उदङ्कचित्सुखादिरूपेण च अवतेरुः। उभयभारतीनाम्ना सरस्वत्यपि अवतीर्णा। सा च स्वयमेव सकलकलारूपत्वात् स्वयंप्रतिभातचतुष्षष्टिकला सती विध्यवतारविश्वरूपं विमलगुणोपेतं सकलकलाऽभिज्ञं मनोभिरामं च भूसुरवरेभ्यश्श्रुत्वा तदनुरागवती बभूव। सोपि विश्वरूपः तां उभयभारतीं गुणज्ञां मनोज्ञां अभिज्ञां विज्ञां च तथैव ब्राह्मणमुखात् श्रुत्वा तदासक्तो बभूव। तौ च अन्योन्यदर्शनलालसौ चिन्तापरवशौ स्वप्ने

द्वितीयः श्लोकः ।

दर्शनभाषणलाभसंहृष्टौ प्रबोधे तदलाभशोकपरवशौ आहारविहार-निर्विण्णौ सुविषण्णौ च दृष्टवन्तौ तयोर्मातापितरौ कथञ्चिदवगत-तत्तन्मनोरथौ अन्योन्याभिलषितपूरकौ अन्योन्यप्रेरकौ अन्योन्य-सन्दर्शनसंहृष्टौ पोषितबन्धुजनौ तोषितभृत्यजनौ हर्षितपान्थजनौ पूजितविप्रगणौ च भूत्वा वधूवरयोः पाणिग्रहणमहोत्सवं यथावत् निर्वर्तयामासतुः ॥

॥ चतुर्थसर्गकथा ॥

एवं दैवगणावतारशिष्यगणशोभितभूतले परमेश्वरावतार-भूतपरमाचार्यश्च प्रथमहायन एव सकलवर्णज्ञानं निजभाषाज्ञानं च आप । द्वितीये लिखितपठनसामर्थ्यं, तृतीये काव्यपुराणादिपारि-ज्ञानं च प्राप्य चौलकर्मणा संस्कृतः, तादृशपुत्रवरेण आत्मानं कुलं च कृतार्थं मन्यमानस्य पितुः शरीरवियोगे सति तत्कृत्यजातं विधिवद्विधाय पञ्चमहायने ज्ञातिजनान् पुरस्कृत्य मात्रा उपनीत-स्सन् गुरुकुलं प्राप्य अधीतसाङ्गचतुर्वेदः द्वित्रिमास एव गुरुसम-विद्यः सर्वतन्त्रस्वतन्त्रः समभवत् । एवं गुरुकुलवाससमये कदाचित् भिक्षामटन् श्रीमदाचार्यः दीनब्राह्मणवरगृहं प्रविश्य बिभिक्षे । तद्गृहिणी भिक्षाप्रदानाशक्त्या अनुतप्यमाना आमलक-मेकं दत्तवती । तद्ग्रासमसहमानः करुणानिधिः कनकधारास्तुत्या प्रत्यक्षीभूतया महालक्ष्म्या 'हे वटो, तव हृद्गतं अवगत्यापि महित-मदीयकटाक्षहेतुप्राक्तनशुभाविरहात् एतयोः किं कर्तुं शक्यं' इत्युक्तस्सन् 'हे मातः, यद्यनुकम्पनीयोऽहं तव तर्हि एतदामलक-

दानफलं अद्यैव दातव्यम् ' इत्युक्तवान् । रमया च विपुलकनकामलकवर्षणं कृतम् । तद्दर्शिनश्च सर्वे विस्मयमापन्नाः । एवं भूसुरवरं सुरवरसम्पत्सम्पन्नं विधाय यथापुरं गुरुकुले वसति स्म ॥

॥ पञ्चमसर्गकथा ॥

अनन्तरं गुरुकुलात् आगत्य गुरुः जननीं परिचरन् वेदराशिं परिपठन् अग्निसूर्योपास्तिं कुर्वन् आदित्यवत् विरेजे । यस्य दर्शनमात्रेण युवापि न कुप्यति, वृद्धोऽप्युपचरति, सर्वोऽपि जनः साञ्जलिबन्धो भवति, तादृशसकलगुणमहिमसम्पन्नानुत्तमात्मजदर्शनेन जननी परां निर्वृतिं प्राप्तवती । कदाचित् मध्याह्नसमये स्नानार्थं गतवतीं मातरं आतपवशेन मूर्च्छितां ज्ञात्वा गुरुवरः शैत्योपचारेण मूर्च्छामपनीय गृहमानीय जननीसौकर्याय स्तुत्या प्रार्थितां पूर्णानदीं गृहसमीपे आनयति स्म । एवं अमानुषवृत्तमेनं अवगतवान् केरळपतिः तत्पादरजसा स्वभवनं पवित्रीकर्तुमनाः गजाद्युपायनपुरस्सरं मन्त्रिप्रवरं प्राहिणोदानेतुम् । तथैवागत्य गुरुसमीपं भूपतिहृदयमावेदितवन्तममात्यवरं गुरुवरः राजगृहं प्रत्यागमनादिना स्वनियमलोपसंभवं प्रतिपाद्य निवर्तयामास । स्वयमेव राजा आगत्य अयुतसुवर्णसहितनाटकत्रयोपायनं पुरस्कृत्य प्रणम्य आत्मीयदृष्टिं कृतार्थयन् श्रीगुरुणा पृष्टकुशलस्सन् नाटकत्रयं वाचयति स्म । तच्छ्रवणसंहृष्टात् गुरोस्सकाशात् अभीष्टपुत्रलाभवरं प्राप्य तद्गुणमुदीरयन्नेव केरलाधीशः स्वनगरीं प्राप्तवान् ॥

# ஸ்ரீசங்கரவிஜயம்.

## முதலாவது ஸர்க்கஸங்கிரஹம்.

சுமார் இரண்டாயிரம் வருஷங்கள் கலியுகத்தில் சென்ற பிறகு பாரதபூமி எங்கும் பௌத்தம் காபாலிகம் முதலிய துர்மதங்கள் பரவி வைதிக மதம் குன்றி வைதிக மதத்தை தூஷிக்கிற பாஷண்டர்களால் ஆஸ்திகர்களுக்கும் முக்யமாக பிராஹ்மணர்களுக்கும் பலவித துன்பம் ஏற்பட்டு எங்கும் யாகங்கள் நடைபெறாததால் தேவர்களுக்கு ஹவிர்பாகம் கிடைக்காமல் துர்மதங்கள் விஷம் போல மிக வேகமாக மேன்மேலும் பரவி வருவதையும் ஆஸ்திகர்களிலும் பலர் துன்பம் தாங்கமாட்டாமல் பிற மதங்களை கைக்கொள்வதையும் பார்த்து இதைத் தடுப்பதற்காக ஸ்ரீ நாரத மஹரிஷி தேவகணங்களுடன் ப்ரஹ்ம லோகம் சென்று ப்ரஹ்மாவிடம் விக்ஞாபனம் செய்தார். இதைக்கேட்டு பிரஹ்மாவும் எல்லோரையும் அழைத்துக் கொண்டு கைலாஸம் சென்று பலவிதமாக ஸ்தோத்ரம் செய்து பரமேச்வரனிடம் விண்ணப்பித்துக்கொண்டார்.

இதைக்கேட்டு பகவானும் தேவர்களின் பிரார்த்தனைக்கு இரங்கி "பயப்படவேண்டாம். நானே பூமியில் அவதரித்து ஔபநிஷதமான ஞான மார்க்கத்தை ஸ்தாபிக்கிறேன். இதற்கு ஒத்தாசையாக நீங்களும் பூமியில் அவதாரம் செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டு தன் அருகிலிருக்கும் ஸுப்ரஹ்மண்யரைப் பார்த்து "நீ முதலில் பூமியில் அவதரித்து பௌத்த மதத்தை நிரஸனம் செய்து வைதிகமான கர்மமார்க்கத்தை ஸ்தாபிப்-

பாபாக" என்று ஆக்ஞை செய்தார். பிறகு தேவர்கள் தங்கள் தங்கள் ஸ்தானம் சென்றதும் ஆதிசேஷன் பதஞ்சலியாகவும் தேவேந்திரன் ஸுதன்வா என்ற அரசனாகவும் அவதரித்தார்கள். ஸுதன்வராஜனும் பௌத்த மதத்தைக் கைக்கொண்டு அவர்களை ஆதரிப்பவன்போல் அபிநயம் செய்து எங்கும் பரவியிருந்த பௌத்தர்களையெல்லாம் ஒன்று கூட்டி ஸுப்ரஹ்மண்யருடைய வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். ஷண்முகரும் குமாரில பட்டர் என்ற பெயருடன் பூமியில் அவதரித்து பௌத்தர்களிடமே சிஷ்யனாக இருந்துகொண்டு பௌத்த மதத்தின் ரஹஸ்யங்களையெல்லாம் அவர்கள் மூலமே நன்கு கற்றுத் தெரிந்துகொண்டு ஸுதன்வராஜனுடைய ஸபையை அடைந்து பௌத்தர்களுடன் விவாதம் செய்து அநேகம் யுக்திகளால் அவர்களுடைய மதத்தைப் பலவாறாக கண்டித்தார். பௌத்தர்களும் மேலே யுக்தி தோன்றாமல் விவாதத்தில் பட்டபாதரை ஜயிக்க திறமையற்றவர்களாய் அரசனைப் பார்த்து "அரசனே, இவ்விதம் யுக்திகளைக் கொண்டு விவாதம் செய்வதால் உண்மையை தீர்மானிக்க முடியாது. புத்தி சக்தி அதிகமுள்ளவர்கள் தங்களுடைய வாதத்திறமையால் உண்மையை மாற்றி தங்களுடைய கக்ஷியை ஸ்தாபித்து விடுவார்கள். அதனால் தைவிகமான நிமித்தங்களைக் கொண்டுதான் உண்மையைத் தீர்மானிக்க வேண்டும். ஆகவே மலையின் உச்சியின் மேல் ஏறி கீழே விழுந்தும் எவன் பிழைத்துக் கொள்கிறானோ அவனுடைய மதம் தான் சிறந்தது என்று தீர்மானிக்கவேண்டும்." என்று கூறினார்கள். அரசனும் அதற்கு சம்மதித்தான்.

பிறகு குமாரிலர் "வேதங்கள் பிரமாணம் என்பது வாஸ்தவமானால் எனக்கு ஆபத்து ஒன்றும் ஏற்படாமலிருக்கட்டும்" என்று வேதமாதாவையே சரணமாக அடைந்து மலையின் உச்சியிலிருந்து கீழே விழுந்தார். ஒருவித ஆபத்துமேற்படாமல் பிழைத்து விட்டார். இதை நேரில் பார்த்தும் பௌத்தர்கள் ஒப்புக்கொள்ளாமல் "மணி, மந்திரம் முதலிய முறைகளைக் கொண்டு இவர் பிழைத்துவிட்டார். இதைக்கொண்டு இவர் மதம் தான் சிறந்தது என்று நிர்மாணிக்கமுடியாது" என்று கூறி விட்டார்கள். இதைக்கேட்டு மஹாராஜன் மிக கோபத்தை யடைந்து "அப்படியானால் கடைசியாக நான் ஒன்று கூறுகிறேன். இதன்படி எல்லோரும் நடந்துகொள்ள வேண்டும். மேலே ஆக்ஷேபம் செய்யக்கூடாது. இக் குடத்திற்குள்ளிருக்கும் வஸ்துவை எவன் கூறுகிறானோ அவனுடைய மதம் தான் பிரமாணம். மற்றவர்கள் சிக்ஷிக்கப்படுவார்கள்" என்று கூறினான். இதற்கு எல்லோரும் சம்மதித்தனர். மறுநாள் காலை சபை கூடினதும் அரசன் உள்ளே பாம்பை விட்டு மேலே மூடப்பட்ட குடத்தை சபைக்கு கொண்டுவரச்செய்தான். பௌத்தர்கள் குடத்திற்குள் பாம்பு இருப்பதாக சொன்னார்கள். குமாரிலர் பாம்பின்மேல் படுத்துக்கொண்டிருக்கும் ஹரி இருப்பதாக கூறினார். அரசனால் இக்குடம் திறக்கப்பட்டதும் குமாரிலர் சொன்னபடியே இருப்பதை பார்த்து அரசன் பட்டரைக் கொண்டாடி கௌரவித்து பூஜித்து வைதிக தர்மத்தைக் கைக்கொண்டு பௌத்தர்களெல்லோரையும் நிக்ரகித்து எங்கும் வைதிகமான

கர்ம மார்க்கத்தை பரவச்செய்தான். முன்போலவே யாகங்களெல்லாம் நடைபெற்று தேவர்கள் ஹவிர் பாகத்தை பெற்றனர். அதனால் எங்கும் ஸுபிக்ஷ மேற்பட்டு யாவரும் அவரவர்களுடைய வர்ணாச்ரம தர்மத் திலிருந்து நழுவாமல் சந்தோஷமாக வாழ்ந்து வந்தனர்.

## இரண்டாவது ஸர்க்க ஸங்கிரஹம்.

இவ்விதம் வைதிக தர்மம் ஓங்கியிருக்கும்பொழுது கேரள தேசத்தில் காலடி என்ற அக்ரஹாரத்தில் வித்யாதிராஜருடைய புத்திரரான சிவகுரு என்ற விப்ரோத்தமர் முறைப்படி ஸாங்கமாக வேதத்தை அத்யயனம் செய்து சாஸ்திரங்களெல்லாவற்றையும் கற்று ஆர்யாம்பா என்ற மனைவியுடன் பலவித யாகங்களால் தேவர்களை திருப்தி செய்வித்துக்கொண்டு ஸ்வதர்மத்தை விடாது அனுஷ்டித்து வந்தார். அவருக்கு தேவர் களுடைய ப்ரஸாதத்தால் எல்லாவித பாக்யங்களும் பூர்ண மாக இருந்தும் புத்ரபாக்யம் ஏற்படாததால் மிக வருந்தி தன் தர்மபத்னியான ஆர்யாம்பாளின் பிரேரணையால் விருஷாத்ரியில் பத்னியுடன் ஒரு வருஷகாலம் புத்ரனை வேண்டி பரமேச்வரனைக் குறித்து நியமத்துடன் தவம் செய்து வந்தார். அதனால் ப்ரஸந்நரான பகவான் அவருடைய ஸ்வப்னத்தில் தோன்றி நீண்ட ஆயுளுள்ள அறிவில்லாத பல புத்ரர்கள் வேண்டுமா? அல்பாயுஸ் ஸுள்ள ஸர்வஞ்ஞனை ஒரு புத்ரன் வேண்டுமா என்று கேட்க ஸர்வக்ஞனை ஒரு புத்ரனே போதுமென்று சிவகுரு சொன்னதும் ஈச்வரன் அநுக்ரஹம் செய்து மறைந்துவிட்டார்.

இவ்விதம் ஈச்வரனுடைய அநுக்ரஹத்தைப்பெற்ற இந்த தம்பதிகள் மிகவும் ஆனந்தமடைந்து விரதத்தை முடித்துக்கொண்டு யதேஷ்டமாக பிராமணஸந்தர்ப்பணம் செய்து அவர்களுடைய ஆசிர்வாதத்தைப் பெற்று பிராமணர்கள் போஜனம்செய்த சிஷ்டமான அன்னத்தை சிவகுரு சாப்பிடும்பொழுது அந்த அன்னத்திலே சைவமான தேஜஸ் புகுந்து அதன் மூலம் ஆர்யாம்பாளுக்கு கர்ப்பம் ஏற்பட்டது. ஸ்வப்னத்தில் விருஷப வாஹனத்தில் வீற்றிருந்த பகவான் தன் கர்ப்பத்தில் பிரவேசித்ததையும் தேவர்கள் அங்கே வந்து ஈச்வரனை ஸ்தோத்ரம்செய்து பூஜித்ததையும் கண்டு தன் கர்ப்பத்தில் இருப்பது ஸாக்ஷாத் பரமசிவனே என்று அறிந்துகொண்டாள். பத்து மாதங்கள் நிறைந்ததும் வைசாகசுத்த பஞ்சமியன்று சுபக்ரஹங்களால் பார்க்கப்பட்ட சுபலக்னத்தில் க்ரஹங்கள் உச்சத்திலிருக்கும்பொழுது ஆர்யாம்பாளுடைய பாக்யவசத்தால் ஸ்ரீ சங்கரரே அவளுக்கு குழந்தையாக அவதரித்தார்.

## மூன்றாவது ஸர்க்க ஸங்கிரஹம்.

ஸ்ரீ சங்கரருடைய அவதாரமேற்பட்டதும் ஸ்ரீ மஹா விஷ்ணு பத்மபாதராகவும் வாயு ஹஸ்தாமலகராகவும் தோடகராகவும் ப்ரஹ்மா ஸுரேச்வரரூபமாகவும் நந்திகேச்வரர் உதங்கராகவும் வருணர் சித்ஸுகராகவும் அவதரித்தனர். மற்ற தேவர்களும் இவ்விதமே ஸ்ரீ சங்கரருடைய அநுக்ரஹத்தைப் பெறவேண்டி ஆங்காங்கு அவதரித்தனர். ஸரஸ்வதியும் "உபயபாரதி" என்ற பெயருடன் அவதரித்தாள். அவள் ஸர்வவித்யா

ஸ்வரூபிணியான தால் பிறர் உபதேசமில்லாமல் தானாகவே அநுபத்து காந்த கலைகளிலும் அறிவுத்திறமையை யடைந்தவளாய் நற்குணங்களுடன் கூடியவரும் எல்லா வித்யைகளையும் நன்கு அறிந்தவரும் மனதைக் கவருகின்றவரும் ப்ராஹ்மாவின் அவதாரமான விச்வரூபரைப்பற்றி பிராஹ்மண சிரேஷ்டர்கள் மூலம் தெரிந்துகொண்டு அவ ரிடம் ஆசை கொண்டாள். அந்த விச்வரூபரும் நற்குண மறிந்தவளும் அழகியவளும் அறிவுள்ளவளும் படிப் புள்ளவளுமான அந்த உபயபாரதியை பிராமணர் முகமாக கேட்டு அவளிடம் மனது ஈடுபட்டவரானர். இவ்விதம் அவ்விருவர்களும் ஒருவருக்கொருவர் பார்ப்பதில் ஆசை கொண்டவர்களாய் ஸ்வப்னத்தில் மட்டும் பார்த்தும் பேசியும் ஆனந்தமடைந்து விழித்துக் கொண்டதும் மறைந்து விடுவதால் வருந்தியவர்களாய் ஆஹாரம் முதலியவற்றிலும் வெறுப்படைந்தார்கள். இவ்வித நிலைமையைப் பார்த்து அவர்களின் தாய்தந்தையர்கள் அவர்களுடைய எண்ணத்தை அறிந்து அதை நிறை வேற்றுவதில் ஈடுபட்டு ஒருவருக்கொருவர் பிராமணர்கள் மூலமாக சமாசாரத்தை தெரிவித்து நேரிலும் கண்டு பேசி முடிவு செய்து அவர்களுடைய விவாஹத்தை வெகு விமரிசையாக நடத்திவைத்தார்கள். அதில் பிராமணர் களை பூஜித்தும் பந்துக்களை கௌரவித்தும் வந்த எல்லோருக்கும் ஸன்மானம் செய்தும் பரிஜனங்களுக்கு வெகுமதி அளித்தும் மிக சிறப்பாக நடத்தினார்கள்.

## நாலாவது ஸர்க்க ஸங்கிரஹம்.

இவ்விதம் பரமேச்வரனுடைய அவதாரத்தில்

அவருக்கு சிஷ்யராக இருந்து அனுக்ரஹத்தைப் பெற ஆங்காங்கு பூமியில் தேவகணங்கள் அவதாரம் செய்திருக்கும்பொழுது ஈச்வராவதாரமான சங்கரரும் மூன்று வயதிலேயே எல்லா எழுத்துக்களையும் அறிந்து தன் பாஷையையும் நன்கு கற்றார். இரண்டாவது வயதில் எழுதினதைப் படிக்கும் திறமையையும் மூன்றாவது வயதில் காவ்ய புராணங்களில் தேர்ச்சியையும் பெற்று தந்தையால் சௌளம் செய்விக்கப்பட்டார். இவ்விதமான சிறந்த புத்திரனை அடைந்ததால் தானும் தன் குலமும் பயனடைந்ததாக எண்ணிய தந்தை கர்மவசத்தால் கால கதியை யடைந்தார். அவருக்கு அந்திம ஸம்ஸ்காரத்தை நடத்திவைத்து ஞாதிகளைக் கொண்டு தாய் குழந்தைக்கு உபநயனம் செய்து வைத்தாள். பிறகு குருகுலத்தை யடைந்து குருவினிடம் வேதம் வேதாங்கம் முதலிய எல்லா வற்றையும் கற்று இரண்டு மூன்று மாதங்களுக்குள்ளேயே குருவிற்கு சமமாக எல்லா வித்யைகளிலும் மிகுந்த திறமையை யடைந்தார்.

இவ்விதம் குருகுலத்தில் வஸிக்கும்பொழுது ஒரு நாள் நித்யம்போல பிக்ஷாசரணம் செய்துகொண்டு ஸ்ரீ சங்கரர் ஒரு ஏழை பிராமணர் வீட்டிற்கு சென்று பிக்ஷை கேட்டார். அந்த வீட்டிலிருந்த பிராமணருடைய மனைவி பிக்ஷை போடுவதற்கு ஒன்றுமில்லாததால் மிக வருந்தியவளாய் நெல்லிக்கனி ஒன்றைக் கொடுத்தாள். அவர்களுடைய ஏழ்மை நிலைமையை அறிந்து ஸஹிக்காதவராய் அதை போக்குவதற்காக

கருணாநிதியான சங்கரர் 'கனகதாரா' ஸ்தோத்ரத்தால் லெக்ஷ்மியை துதித்தார். லெக்ஷ்மியும் நேரில் வந்து "ஹே வடுவே! உன் மனதிலுள்ளதை அறிந்தேன். என் கடாக்ஷத்திற்கு காரணமான புண்யத்தை இவர்கள் முற்பிறவியில் செய்யாததால் நான் என்ன செய்யமுடியும்" என்று கூறினாள். உடன் சங்கரர் "தாயே! என்னிடம் உனக்கு தயவு இருக்குமானால் எனக்கு நெல்லிக்கனி கொடுத்த சுகிர்தத்தின் பலனை இப்பொழுதே இவர்களுக்கு கொடுக்க வேண்டும்" என்று சொன்னதும் லெக்ஷ்மி மனமிரங்கி அந்த கிருஹத்தைச் சுற்றிலும் தங்க நெல்லிக்கனி மழையைப் பொழிந்தாள். இதை யறிந்து எல்லோரும் ஆச்சர்யமடைந்தனர். இவ்விதம் பிராமணனை குபேரனுக்குச்சமமான செல்வமுள்ளவனாகச் செய்து முன்போல குருகுலத்தில் வஸித்துவந்தார்.

## ஐந்தாவது ஸர்க்க ஸங்கிரஹம்.

பிறகு வித்யாப்யாஸம் முடிவு பெற்றதும் குருகுலத்திலிருந்து திரும்பி வந்து மாத்ருசுச்ருஷையுடன் அக்னியையும் ஆதித்யனையும் உபாஸித்துக்கொண்டு சூர்யன் போல் பிரகாசிக்கிற ஸ்ரீ சங்கரர் எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாயிருந்தார். எல்லோரும் இவரைக் கொண்டாடுவதையும், வயதானவர்களும் இவரை உபசரிப்பதையும் கண்டு இவருடைய தாயார் மிக ஆனந்தமடைந்தாள். ஒரு நாள் மத்யான ஸமயம் ஸ்னானத்திற்காக நதிக்குப்போன இவள் வெய்யில் தாங்க மாட்டாமல் மூர்ச்சை யடைந்தாள். இதை அறிந்து ஸ்ரீ

சங்கரர் சைத்யோபசாரம் செய்து தாயாரின் மூர்ச்சையை தெளிவித்து வீட்டுக்கு அழைத்துவந்து, பிறகு தாயாரின் ஸௌகர்யத்திற்காக பூர்ணாநதியை ஸ்தோத்ரம் செய்து ப்ரார்த்தித்து தன் வீட்டின் ஸமீபமாக ஓடும்படி செய்தார்.

இவ்விதம் அமாநுஷமான காரியங்களைச் செய்து வந்த ஸ்ரீ சங்கரருடைய மஹிமையைக் கேள்விப்பட்ட கேரள தேசத்தரசன் தன் அரண்மனையில் அவருடைய பாததூளி பட்டு பரிசுத்தமாக வேண்டுமென்று விரும்பி அவரை அழைத்துவர கஜம் முதலிய காணிக்கைகளுடன் தன் முக்ய மந்திரியை அனுப்பினான். மந்திரியும் குருவின் ஸமீபம் சென்று அரசனின் ஆவலைத் தெரிவித்தான். ஸ்ரீ சங்கரரும் யாத்திரை செய்து அங்கு வருவதில் தன்னுடைய ஆச்ரம தர்மங்களுக்கு லோபம் ஏற்படக்கூடுமாதலால் தான அங்கு வருவது உசிதமில்லையென்றும் ஸ்வதர்மங்களை சரிவர ப்ரஜைகளை அனுஷ்டிக்கும்படி செய்வதே அரசனுடைய கடமையெனவும் சொல்லி மந்திரியை திருப்பி அனுப்பிவிட்டார். மந்திரி மூலம் விருத்தாந்தமறிந்து கொண்ட அரசன் தானே நேரில் வந்து பதினாயிரம் ஸ்வர்ணங்களுடன் தான் செய்த மூன்று நாடகங்களை காணிக்கையாக செலுத்தி வணங்கினதும் ஸ்ரீ குருவால் க்ஷேமம் விசாரிக்கப்பட்டு தன் நாடகம் மூன்றையும் வாசித்துக் காண்பித்தான். அதைக் கேட்டு சந்தோஷமடைந்த ஸ்ரீ குருவினிடம் புத்ரலாபம் ஏற்படும்படி அநுக்ரஹம் செய்யவேண்டுமென்று ப்ரார்த்தித்து குருவின் அனுக்ரஹத்தைப் பெற்று அவருடைய

குணங்களை சொல்லிக்கொண்டே தன் நகரம் அடைந்தான்

उक्तकथासंग्राहकः

द्वितीयश्लोकः ॥

योहिभट्टमुखेननाशितबौद्धवृन्दजगत् सुरै-
रर्थितोऽवततार वैदिकतत्त्वबोधविवृद्धये ।
लीलयाऽखिलवेदशास्त्रविदादिमाश्रमचर्यया
दीनपोषणमातृतोषणविस्मिताखिलपावनः ॥ २ ॥

योहीति । पूर्वश्लोके गुरुस्मरणमुक्तम् । तच्चरित्रस्यैव वर्णयिष्यमाणत्वात् यच्छब्देन गुरुर्ग्राह्यः । सुरैरर्थित इत्युक्त्या सः परमेश्वर एव । 'यथा घटश्च कलशः कुम्भश्चैकार्थवाचकः । तथा मन्त्रो देवता च गुरुश्चैकार्थवाचकः ॥' इति च गुरुदेवतयोरैक्यमभिहितम् । तथा च गुर्वभिन्नः यः परमेश्वरः ब्रह्मादिभिः सुरैः अर्थितः प्रार्थितः सन् स्कन्दादीन् भट्टादिरूपेणावतार्य अवतीर्णैस्तैः बौद्धवृन्दं नाशयित्वा कर्मोपासनामार्गं प्रचारयामासेत्यर्थः ॥

अक्षरार्थस्तु एवम् — अहिभट्टमुखेननाशितबौद्धवृन्द-जगत् इत्येकं पदम् । अहिपदेन शेषावतारभूतः पतञ्जलिः, भट्टपदेन स्कन्दावतारभूतः कुमारिलभट्टः, इनपदेन इन्द्रावतार-भूतसुधन्वराजश्च बोध्यन्ते । तथा च अहिसहितः भट्टः अहि-

भ्रष्टः सः मुखं द्वारं यस्य इनस्य तेन नाशितं बौद्धानां वृन्दं तथाभूतं जगत् यस्य सः। किमर्थम्? वैदिकतत्त्वबोधविवृद्धये। वैदिकानि तत्त्वानि त्रीणि कर्म उपासना ज्ञानं चेति उपायोपेय-भावापन्नानि। तेषां मध्ये कर्मोपासनयोः बोधविवृद्धये। बोधपूर्वकानुष्ठानाभिवृद्धये इत्यर्थः। एतेन प्रथमसर्गार्थ उक्तः॥

अनन्तरं वृषाद्रौ लिङ्गात्मना आविर्भूतः परमेश्वरः आर्याम्बया शिवगुरुणा चाभ्यर्थितः सन् ब्रह्मविद्याप्रचाराय श्रीशंकररूपेणावततार इतीयं द्वितीयसर्गकथा। तत्राक्षरयोजना — लीलाशब्दस्य अर्शआद्यजन्तत्वेन 'क्रीडाविलासयोर्लीला' इति कोशेन च लीलावती, विलासवती, विलासिनी इति स्त्रीसामान्यवाचकस्य प्रकृतानुरोधात् प्रकरणविशेषाच्च आर्याम्बेति स्त्रीविशेषपरत्वम्। तथा अखिलवेदशास्त्रविदा गुरुकुलवासादिनियमपूर्वकं अधीतसाङ्गस्वाध्यायेन शिवगुरुणेत्यर्थः। आदिमाश्रमचर्यया उपलक्षितेन। ब्रह्मचर्याश्रमोचितगुरुकुलवासाग्निपरिचरणादिनियमविशेषवतेत्यर्थः। ब्रह्मचर्यपूर्वकतपश्चर्या च विवक्ष्यते। तथा च पुत्रार्थतपश्चरणकृद्भ्यां आर्याम्बाशिवगुरुभ्यां प्रार्थितः परमेश्वरः इत्यर्थः फलितः। एतेन द्वितीयसर्गार्थ उक्तः॥

श्रीमदाचार्यावतारसमये पद्मपादादीनामवतारः, उभयभारतीविश्वरूपयोः विवाहश्च तृतीयसर्गार्थः। तत्राक्षरयोजना — अखिलश्चासौ वेदश्च अखिलवेदः तेन शास्ति स्वाधिकारं निर्वर्त-

यतीति अखिलवेदशाखा स चासौ अश्वेति अखिलवेदशाखः ब्रह्मा तदवतारभूतः विश्वरूपो लक्ष्यते । विदः ज्ञानस्य आदिः कारणभूता या सा सरस्वती । सरस्वत्याः दुर्गालक्ष्मीरूपत्वात् मापदेन सा गृह्यते । तेन तदवतारभूतोभयभारती लक्ष्यते । तथा विश्वरूपसहिता उभयभारती लीलया विवाहशोभया उपलक्षिता बभूवेत्यर्थः । आश्रमचर्यया गृहस्थाश्रमनियमेन चोपलक्षितेत्यर्थः ॥ अखिलवेदः शास्ता विधिमात्रपरः यस्य विश्वरूपस्य इति तद्-साधारणार्थपरत्वमपि संभवति । तथा अखिलवेदशास्तृ निखिल-वेदरूपशास्त्रं अं ब्रह्माणं वेदयति प्रापयति इति विष्णुः । 'यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै' इति श्रुतेः । तेन तदवतारभूतः पद्मपादो लक्ष्यते । एवं विस्मिताखिल-पावनपदस्य हस्तामलकतोटकाचार्यपरत्वं, उभयोर्वीर्यवंशत्वात् ॥ अखिलविस्मापकचरित्रत्वाच्च ॥

चतुर्थसर्गार्थे अक्षरयोजना— लीलया अनायासेनेत्यर्थः । उत्तरत्र सर्वत्र संबध्यते । अखिलानां वेदः वेदनं ज्ञानं यस्य गुरोः सः । अखिलपदेन यथायथमर्थो बोध्यते । तत्र प्रथम-हायने अखिलवर्णाः, द्वितीयहायने अखिललिखितानि, तृतीय-हायने अखिलकाव्यपुराणानि च बोध्यन्ते । शास्त्रपदेन साङ्ग-स्वाध्याय उच्यते । शास्त्रं वेत्तीति शास्त्रवित् अखिलवेदश्चासौ शास्त्रविच्च । आदिमाश्रमचर्यया ब्रह्मचर्यनियमकलापेनोपलक्षित इत्यर्थः । एवं आदिभूतायाः संपत्कारणभूतायाः मायाः लक्ष्म्याः

श्रमचर्यया श्रमकरणेन निर्बन्धकरणेन दीनब्राह्मणपोषणं, मातुस्तोषणहेतुनद्यानयनं च, ताभ्यां विस्मिताः विस्मयमापन्नाः विस्मापिता वा । अन्तर्भावितो णिच् । अखिलाः यस्य सः । स्वाश्रितान् दर्शनभाषणादिना पावयति पवित्रयति इति पावनश्च । तथा दीनपोषणादिविचित्रचरित्रेण विस्मितः विस्मयमापन्नः अखिलपः अखिलपालकः भूपतिः केरळराज इत्यर्थः । तस्य अवनं वरदानेन रक्षणं यस्य सः तथाभूतः सन् । एवंभूतं गुरुं स्मरन् ॥

எந்த குருமூர்த்தியான பரமேச்வரர் ப்ரஹ்மா முதலிய தேவர்களால் பிரார்த்திக்கப்பட்டு வேதத்தில் கூறப்பட்ட கர்ம, உபாஸனம், ஞானம் என்ற மூன்றும் நன்கு விருத்தியடைவதற்காக (அஹி) சேஷரின் அவதாரமான பதஞ்சலி (பட்டர்) ஸ்கந்தரின் அவதாரமான குமாரில பட்டர் (இனர்) இந்திரனுடைய அவதாரமான ஸுதன்வராஜன இவர்களைக்கொண்டு உலகத்தில் எங்கும் பரவியிருந்த பௌத்த மதத்தை அழிக்கும்படி செய்தாரோ, பிறகு விருஷாத்ரியில் லிங்கரூபமாக ஆவிர்பவித்த பரமேச்வரன், ப்ரஹ்மசர்ய நியமத்துடன குருகுலவாஸம் செய்து ஸகல வேதங்களையும சாஸ்திரங்களையும் கற்றறிந்த சிவகுருவாலும் அவருடைய மனைவியான ஆர்யாம்பாளாலும் தபஸ்ஸினால் ஸந்தோஷப்படுத்தப் பட்டவராய் காலடியில் அவர்களுக்கு குழந்தையாக் அவதரித்தார். அப்பொழுது எல்லா வேதங்களைக் கொண்டு தன் அதிகாரத்தை நடத்துகின்ற ப்ரஹ்மா

விச்வரூபராக அவதரித்தார். ஞானத்திற்கு காரணமான ஸரஸ்வதியும் உபயபாரதி என்ற பெயருடன் அவதரித்தாள். விச்வரூபர் உபயபாரதியை விவாஹம் செய்து கொண்டார். ப்ரஹ்மாவிற்கு வேதத்தை உபதேசித்த விஷ்ணுவும் பத்மபாதராக அவதரித்தார். வாயுவும் ஹஸ்தாமலகராகவும் தோடகராகவும் அவதரித்தார்.

ஸ்ரீ சங்கரரும் விளையாட்டாகவே முறையாக மூன்று வயதிற்குள் எழுத்து, பாஷை, காவ்யம், புராணம் முதலியவைகளைக் கற்று பின் உபநயனம் செய்விக்கப்பெற்று குருகுலவாஸம் செய்து ப்ரஹ்மசர்ய நியமத்துடன் ஸாங்கமாக வேதத்தையும் சாஸ்திரங்களையும் கற்று வரும்பொழுது ஸம்பத்துக்கு காரணமான லெக்ஷ்மியை நிர்பந்தித்து ஏழையான பிராமணனுடைய தாரித்ர்யத்தை போக்கி காப்பாற்றியும் தாயார் ஸந்தோஷமடைய பூர்ணநதியை தன் வீட்டின் ஸமீபமாக ஓடும்படி செய்தும் தன்னுடைய அமானுஷமான செய்கைகளால் எல்லோரையும் ஆச்சர்யமடையும்படி செய்தும் தன்னைப் பார்த்துப் பேசுபவர்களுடைய பாபங்களைப் போக்கி பாவனர்களாகச்செய்தார். இதைக் கேட்டு ஆச்சர்யமடைந்த கேரள தேசத்தரசனுக்கு அபீஷ்டமான வரங்களைக் கொடுத்து காப்பாற்றினர். ( அவரை எப்பொழுதும் ஸ்மரியுங்கள )

## ॥ तृतीयः श्लोकः ॥

### ॥ पञ्चमसर्गविशिष्टकथा ॥

एवं गच्छति काले कदाचित् उपमन्युप्रभृतयो मुनिप्रवराः भाविवृत्तान्तमावेदयितुं समागताः । तांश्च श्रीगुरुः मात्रा सार्कं मधुपर्कादिना सादरं संपूज्य 'दैववशात् संप्राप्तं तत्रभवतामलभ्ययोगतुल्यं दर्शनमह्लादिकम् । कृतार्थः संजातोऽहं भवतामागमनेन' इत्युवाच । ततश्चिरं तैः सह संलापमकरोत् । माता च रहसि कथाप्रसंगेन तान्सविनयं तनयस्यायुरादिकं प्रपच्छ । तदानीमगस्त्यमहर्षिः 'आदावष्टौ कारणान्तरादष्टौ पुनश्च षोडश' इत्यादि वक्तुमुपक्रान्तवान् । तत दृष्ट्वा महर्षयः नेत्रसूचनया तं निवार्य तेन सार्कं गुरुमामन्त्र्य जग्मुः । एतच्छ्रवणेन भृशं विषण्णां जननीं मोहनिवारणपटूक्तिभिः समाश्वास्य शंकरः संन्यासस्वीकारविषये गुरुभूतमातुरनुमत्युपायं चिन्तयामास ॥

कदाचित् स्नानार्थं नद्यामवतीर्णः शंकरः सद्य एव ग्राहेण गृहीतः सन् उच्चैराक्रुश्य मातरमाह्वयत् । तच्छ्रुत्वा निकटमागता माता तद्दशादर्शनखिन्ना अगत्या अनुज्ञां ददौ । एवं मातुरनुज्ञां लब्ध्वा सद्य एव मानसिकसंन्यासं विधाय ग्राहाद्विमुक्तः तीरं प्राप्य मातरं तुरीयाश्रमोचितकृत्यशासनं प्रार्थितवान् । तनयस्य जीवितलाभेन संतुष्टापि माता सन्यासेन तद्वियोगं स्मृत्वा

दुःखिना सती गत्यन्तराभावात् पुत्रप्रसूतिफलसंस्कारकर्तव्यता शासितवती । 'मा शुचर्मातः । यत्र कुत्रावस्थितोऽपि स्वस्थया अस्वस्थया वा नक्तं दिवा वा स्मृतमात्रः झटित्यागत्य, अत्रैव मम स्थित्या यत् फलं प्राप्नुयाः ततः शतगुणफलं प्रापयिष्ये । नात्र शोचनीयम् । धनं चापरिमितं वर्तते । ज्ञातयश्च पालयिष्यन्ति' इत्यादिसूक्तिभिः मातरमेकपुत्रां पतिवियुक्तां पुत्रलालनां तद्वियोगदुःखपरवशामाश्वास्य ज्ञातिषु अर्पितवान् । अनन्तरं प्रस्थानसमये मातृसौकर्याय पूर्वमानीतपूर्णानदीतरङ्गैः वर्षाकाले तड्यमाना यदुपतिमूर्तिः चलितुमारब्धा । तत्प्रतिविधानाय आकाशवाण्या प्रेरितः सन् तद्विग्रहं स्थलान्तरे निरुपद्रवं सम्यक् स्थापयित्वा चिराय लोकानुग्रहकरणं च संप्रार्थ्य प्रतस्थे ॥

ततो योगमार्गेण नर्मदातीरे श्रीगोविन्दगुरुवनमागत्य तद्वासगुहाद्वारं प्राप्य स्तुतवान् । तेन च कस्त्वमिति पृष्टः दशश्लोकया प्रत्युत्तरं ददौ । तदीयबोधप्रकाशकवचनजातमाकर्ण्य संहृष्टान्तरङ्गः श्रीगोविन्दभगवत्पादः समाधिना तं साक्षात् 'शंकर' एवेति विदित्वा आचारसंप्रदायार्थं पादोपसंग्रहणादिकं कारयित्वा महावाक्यान्युपदिदेश । प्राप्तोपदेशश्च श्रीगुरुः शुश्रूषया तं तोषयन् नर्मदातीर एव आश्रमोचितनियमध्यानादिपरः सन् कञ्चित्कालमुवास । कदाचित् वार्षिकमहाप्रवाहभीतजनघोषमाकर्ण्य करुणापरवशः देशिकं च समाधिस्थं वीक्ष्य

अभिमन्त्रितकरकमध्ये तत्प्रवाहं प्रावेशयत् । तावता अतिमोदमान-जनसमूहमुखात् समाधिव्युत्थितदेशिकवर्यः वृत्तवृत्तान्तमाकर्ण्याति-सन्तोषेण गुरुमाहूय एवमुक्तवान् — "पूर्वं कदाचित् अत्रि-सत्रसमये व्यासाचार्यैः मां प्रति 'सर्ववित्प्रवरः कश्चित् शिष्यस्तव भविष्यति । स च नर्मदाप्रवाहं कमण्डलावन्तर्भावयेत् । स तावत् ब्रह्मसूत्राणां विशदं भाष्यं विधास्यति । दुर्मतजालं च निर-सिष्यति' इत्युक्तम् । तादृशश्च शिष्यः त्वमेवेति इदानीं ज्ञातम् । अतो लोकोपकाराय काशीं गच्छ । भजस्व परमेश्वरम् । तदनु-ग्रहात् कर्तव्यजातं सर्वं सेत्स्यति" इति । ततः प्रसन्नगुरुकटाक्षानु-गृहीतः सन् आचार्यः ततः प्रस्थाय काशीं प्राप्याधिवसति स्म ॥

॥ षष्ठसर्गकथा ॥

अत्रान्तरे ब्राह्मणसूनुः कश्चित् विरक्ताग्रणीः गुरुपादमुप-सृत्य भवसागरतरणं संप्रार्थ्य उपदेशं प्राप्तवान् । स एव श्रीगुरोः सनन्दनो नाम प्रथमशिष्यः । एवं अन्येऽपि देवांशभूतशिष्यप्रवराः प्राप्तवन्तः । एवं शिष्यगणैः विराजमानः कदाचित् माध्याह्निक-स्नानाय जाह्नवीं प्रति गमनसमये चण्डालरूपेण आगतं विश्वनाथं दृष्ट्वा मार्गात् अपसरणाय गच्छ गच्छेत्युवाच । स च श्री-भगवत्पादानां तत्वज्ञानदार्ढ्यातिशयं प्रख्यापयितुं पृष्टवान्— 'भो दूरीचिकीर्षितं वस्तु किं साक्षिचैतन्यम् उत अन्नमयशरीरम् , इति विकल्प्य अद्वैतवादिनस्तव आत्मभिन्नस्य मायाविलसितत्वात्

मायिकस्य च अवस्तुत्वात् वास्तविकब्राह्मणश्वपचादिभेदविरहात् बहुषु प्रतिबिम्बितस्यापि सूर्यबिम्बस्य एकत्वानपायात् परमार्थदृशां व्यावहारिकस्य च अकिञ्चित्करत्वात् परमार्थदृशः तव गच्छ गच्छेति वचनं स्वस्यैव स्वस्मात् दूरीचिकीर्षापर्यवसन्नम्' इति। तादृशचण्डालं प्रति 'साधु भोः प्रतिवचनं साधु। तथैव शास्त्रसिद्धान्तः। ममापि तथैव दृढनिश्चयः। नास्ति अखण्डानन्तानन्दाद्वितीयात्मवस्तुनि भेदकलनापि' इत्येवमादि संभाषमाणः श्रीगुरुः न दृष्टवान् चण्डालरूपम्। दृष्टवांश्च चन्द्रकलाधरगङ्गाधररूपम्। हृष्टान्तरङ्गः तुष्टाव स्तुतिविशेषैः। ततश्च अतिप्रसन्नः परमेश्वरः 'भो भो भवान् तत्वविदामग्रणीः शोभते। शोधिता च तव विवेकनिष्ठा। श्रीवेदव्यासमतुल्यमहिमानं अतः व्यासप्रणीतवेदान्तवाक्यार्थनिर्णायकसूत्राणां विशदभाष्यं विधाय श्रुतियुक्त्यनुभवावष्टम्भेन सकलभेदवादिमतानि निरस्य अद्वैतमतप्रचारधुरन्धरशिष्यवरान् तत्र तत्र स्थापयित्वा अस्मत्स्थानं आगमिष्यसि। तावकभाष्यमेव इन्द्रादिदेवैरपि आदरणीयं भविष्यति। ब्रह्मलोकेऽपि महीयमानं भवति' इत्युक्त्वा अन्तर्दधे॥

एवं परमेश्वरानुग्रहं प्राप्य सूत्रभाष्यकरणोत्कण्ठहृदयः सह शिष्यगणैः बदरिकाश्रमं प्राप्य तत्रत्यब्रह्मनिष्ठैः साकं किञ्चित्कालं उपनिषदर्थं विचार्य व्याससूत्राणां भाष्यं रचयामास। शब्दगाम्भीर्यार्थयुक्तिगाम्भीर्यसूक्तिगाम्भीर्ययुतं श्रुतिसूत्रगाम्भीर्यं

आविष्कुर्वन् पङ्क्तिवाचनवेलायामेव श्रोतॄणां पठितॄणां च कृतार्थताबुद्धिं उत्पादयन् मधुरं यद्भाष्यं दृष्ट्वा कुमारिलभट्टाचार्यः अत्यन्तं कुतूहल प्राप्य अध्यासभाष्यमात्रस्य अष्टौ सहस्राणि वार्तिकानि भान्ति इत्युक्तवान् , तस्य भाष्यस्य निरतिशयमहिमातिशयवत्त्वं किं परिमातुं वाक्यम् । तथैव उपनिषदां गीतानां च भाष्यं, अनेकाद्वैतग्रन्थावलिं च रचयामास ॥

இவ்விதம் கொஞ்சகாலம் சென்றதும் ஒருநாள் உபமன்யு முதலிய முனிசிரேஷ்டர்கள் அவதார விருத்தாந்தத்தைத் தெரிவிப்பதற்காக ஸ்ரீ சங்கரருடைய கிருஹத்திற்கு வந்தனர். ஸ்ரீ குருவும் தாயுடன் முறைப்படி ஆதரவுடன் மதுபர்க்கம் முதலியவைகளால் அவர்களை பூஜித்து "தங்கள் வரவால் நாங்கள் கிருதார்த்தர்களானோம். அல்ப்பபோகம் போல் கிடைக்கப்பெறாத தங்கள் தர்சனமும் ஸல்லாபமும் எங்களுக்கு கிடைத்தது பெரிய பாக்யம்" என்று கூறி உபசரித்தார். பிறகு முனிவர்கள் சங்கரருடன் வெகுநேரம் தனிமையில் பேசிவிட்டு பிறகு தாயாருடன் பேசிக்கொண்டிருந்தார்கள். அப்பொழுது தாயார் ரஹஸ்யமாக அவர்களிடம் "என் குழந்தையின் ஆயுர்பாவத்தைச் சொல்லவேண்டும்" என்று கேட்டான். அப்பொழுது அகஸ்தியமுனிவர் "இவனுக்கு பதினாறு வயது ஏற்பட்டிருந்தாலும் மேலும் பதினாறு வருஷம பூமியில் வசிப்பான்" என்று வரும் கால சமாசாரத்தை சொல்ல ஆரம்பித்ததும் மற்ற முனிவர்கள் கண் ஜாடையால் அவரை தடுத்து சங்கரிடம் விடை

பெற்றுக்கொண்டு எல்லோரும் சென்றனர். இதைக் கேட்டு மிக வருத்தமடைந்த தாயாரை பலவிதமாக சமாதானப்படுத்தி, தான் ஸந்யாஸம் பெற்றுக்கொள்ள மாதாவின் அனுமதியைப்பெறும் உபாயத்தை ஆலோசிக்கலானார்.

ஒரு நாள் ஸ்நானத்திற்காக நதியில் இறங்கிய ஸ்ரீ சங்கரரை முதலை பிடித்துக்கொண்டது. அங்கிருந்தே உரக்க மாதாவை கூப்பிட்டார். அதைக்கேட்டு அருகில் வந்து தனயனின் நிலையை அறிந்து மிகுந்த துக்கமடைந்த தாயிடம் 'ஸந்யாஸாச்ரமஸ்வீகாரம் செய்துகொண்டால் பிழைக்க முடியும' என்று கூறினதும் வேறு கதியில்லாததால் எப்படியாவது பிழைத்தால் போதுமென்று அனுமதி கொடுத்தாள். இவ்விதம் தாயின் அனுமதியைப் பெற்று உடனே அங்கேயே மானஸமாக ஆச்ரம ஸ்வீகாரம் செய்து கொண்டதும் முதலையிலிருந்து விடுபட்டார். முதலையாக வந்த கந்தர்வனும் சாபம் நீங்கி தன் லோகம் சென்றான். சங்கரரும் கரைக்கு வந்து தன் ஆச்ரமத்திற்குகந்த காரியங்களை நடத்திக்கொள்ள பிரார்த்தித்தார். தன பிள்ளை பிழைத்ததில் கொஞ்சம் சந்தோஷமடைந்தபோதிலும ஸன்யாஸியாகப் போவதால் அவரின் பிரிவை நினைத்து வருந்தி கடைசியில் பிள்ளை பெற்றதின் பயனாக அந்த்ய காலத்தில் தனக்கு ஸம்ஸ்காரம் செய்ய வேணுமென்று கூறினாள். "அம்மா, கொஞ்சமும் வருந்தவேண்டாம், எந்த இடத்திலிருந்தாலும் எந்த சமயத்திலும் தங்களால் நினைத்த மாத்திரத்தில் இங்கு வந்துவிடுவேன். நான் இங்கேயே இருந்தால் உனக்கு

என்ன சிரேயஸ் ஏற்படுமோ அதைக்காட்டிலும் நூறு மடங்கு அதிகமான சிரேயஸ்ஸை அடையும்படி செய்கிறேன்" என்று ஒரே பிள்ளையைப்பெற்று கணவனையுமிழந்து புத்ரவாத்ஸல்யத்தால் அவன் பிரிவை ஸஹிக்காது வருந்துகின்ற தாயாரை பலவிதமாக ஆச்வாஸனம் செய்து அவளைக் காப்பாற்றி வரும்படி பந்துக்களிடம் ஒப்புவித்துவிட்டு புறப்பட்டார்.

புறப்படும் சமயத்தில், முன்னால் தன் தாயாரின் ஸௌகர்யத்திற்காக தன் வீட்டின் அருகில் ஓடும்படி செய்த பூர்ணாநதியின் பிரவாஹத்தால் அங்கு இருக்கின்ற கிருஷ்ண விக்ரஹம் அசைய ஆரம்பித்தது. உடனே ஆகாசத்தில் "என்னை சரியான இடத்தில் ஸ்தாபித்து விட்டு செல்லவேண்டும்" என்ற வார்த்தையை கேட்டு அவ்விதமே மற்றோரிடத்தில் அசையாதபடி கிருஷ்ண மூர்த்தியை ஸ்தாபித்து வெகுகாலமிங்கு இருந்து லோகத்திற்கு அனுக்ரஹம் செய்யவேண்டுமென்று பிரார்த்தித்து புறப்பட்டார்.

பிறகு குருவைத்தேடி முறைப்படி அவரிடம் உபதேசம் பெற்றுக்கொள்வதற்காக தன் யோக சக்தியால் கர்மதாதீரம் சென்று ஸ்ரீ கோவிந்தபகவத்பாதர் வாஸம் செய்யும் குஹாத்வாரமடைந்து அவரை ஸ்தோத்ரம் செய்தார். "நீ யார்" என்று அவர் கேட்டதற்கு "தசச்லோகி" பத்து சுலோகங்களால் பதில் சொன்னார். அதைக்கேட்டு மிகுந்த சந்தோஷமடைந்த ஸ்ரீ கோவிந்த பகவத்பாதர் யோகபலத்தால் இவரை ஸாக்ஷாத் பரமேச்

வரனே என்று அறிந்து மஹாவாக்யங்களை உபதேசித்தார். ஸ்ரீ சங்கரரும் லோக ஸங்க்ரஹத்திற்காக சிஷ்ய தர்மத்தை ப்ரகாசப்படுத்த சுச்ருஷையால் அவரை ஸந்தோஷப் படுத்திக்கொண்டு தன் ஆச்ரம தர்மங்களையும் அனுஷ்டித்துக் கொண்டு கொஞ்சகாலம் அங்கு வஸித்துவந்தார்.

ஒரு நாள் மிகுந்த மழையால் நர்மதையில் ப்ரவாஹம் ஏற்பட்டு அதனால் பயமடைந்த ஜனங்களின் கூக்குரலைக் கேட்டுக் கருணைகொண்ட சங்கரர், தேசிகர் ஸமாதியிலிருப்பதைப் பார்த்து தன் மந்திர வீர்யத்தால் ப்ரவாஹத்தை தன் கமண்டலுவில் அடக்கிவிட்டார். இதனால் ஆனந்தமடைந்த ஜனங்கள் மூலம் ஸமாதியிலிருந்து விழித்துக்கொண்ட தேசிகர் நடந்த வரலாற்றைக் கேட்டு சந்தோஷத்துடன் குருவை கூப்பிட்டு “முன் ஒரு சமயம் அத்ரிமஹரிஷியின் ஸத்ர யாகத்தில் ஸ்ரீ வியாஸாசார்யாள் என்னைப்பார்த்து ‘ஸர்வக்ஞனான ஒருவன் உனக்கு சிஷ்யனாக ஆகப்போகிறான். அவன் நர்மதா ப்ரவாஹத்தை தன் யோக சக்தியால் கமண்டலுக்குள் அடக்கிவிடுவான். ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு சிறந்த பாஷ்யம் எழுதுவான். துர்மதங்களை யெல்லாம் அழித்துவிடுவான்’ என்று சொன்னார். வியாஸர் கூறிய சிஷ்யன் நீதான் என்று இப்பொழுது நன்கு தெரிந்துவிட்டது. ஆனதால் நீ இப்பொழுது காசிக்குச்செல். அங்கு ஸ்ரீ விச்வேச்வரருடைய அனுக்ரஹத்தால் எல்லாக் காரியங்களும் நிறைவேறும்” என்று கூறி தன் கடாக்ஷத்தால் அநுக்ரஹித்தார். இவ்விதம் குருவின் அநுக்ரஹத்தைப்

பெற்று அங்கிருந்து புறப்பட்டு காசிக்குச் சென்று அங்கு வஸித்து வந்தார்.

## ஆறாவது ஸர்க்க ஸங்கிரஹம்.

இந்த ஸமயத்தில் விஷயங்களில் மிகுந்த வைராக்யத்தை யடைந்த பிராமண குமாரனொருவன் ஆசார்யாளை யடைந்து பாதத்தில் விழுந்து ஸம்ஸாரக்கடலிலிருந்து தன்னைக் கரை யேற்றுவிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவனுக்கு உபதேசம் செய்து அவனை சிஷ்யனாக ஏற்றுக்கொண்டார். இவன்தான் ஆசார்யாளுடைய முக்ய சிஷ்யனான ஸநந்தனன். இவ்விதமே தேவாம்சமாக அவதரித்த மற்றும் பலரும் சிஷ்யர்களாக வந்தார்கள். இவ்விதம் சிஷ்யகணங்களுடன் காசியில் ஆசார்யாள் வாஸம் செய்து வரும்பொழுது ஒருநாள் மாத்யாஹ்னிக ஸ்நானத்திற்காக சிஷ்யர்களுடன் கங்கைக்கு போகும் வழியில் சண்டாளன் ஒருவனைப் பார்த்து "தூர விலகு, விலகிச்செல்" என்று சொன்னார். ஸ்ரீ சங்கரருடைய தத்வஞானானுபவத்தை உலகிற்குத் தெரியும்படி செய்வதற்காகவே சண்டாள வேஷத்துடன் வந்த ஸ்ரீ விச்வநாதர் ஸ்ரீ சங்கரரைக் கேட்டார்— "ஆத்மாவை விலகச் சொல்கிறாயா அல்லது அன்னமயமான சரீரத்தையா? அத்வைதியான உனக்கு ஆத்மாவைத்தவிர வேறு பொருள் உண்மையில் கிடையாது. பிராமணன் சண்டாளன் என்ற வேற்றுமையெல்லாம் மாயையால் தோன்றுவதால் உண்மையாக கிடையாது. ப்ரதிபிம்பம் பலவாகத் தோன்றினாலும்

பிம்பமான சூரியன் ஒன்றுதான். பரமார்த்த தர்சியான நீ விலகும்படி சொல்வது முற்றிலும் பொருந்தாது. தன்னையே தன்னிடமிருந்து விலக்குவதற்கொப்பாகும்" இதைக் கேட்டு ஸ்ரீசங்கரர் "நன்று! நன்று! பதிலுரை மிகவும் போற்றத்தக்கது. இதுதான் சாஸ்திரங்களின் ஸித்தாந்தம். எனக்கும் அவ்விதமேதான் த்ருடமான அபிப்பிராயம். அகண்டமானதும் பரிச்சேதமற்றதும் ஆனந்த ரூபமுமான அத்விதீயாத்ம வஸ்துவில் கொஞ்சம்கூட பேதமென்பது கிடையாது" என்று சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது அந்த சண்டாளனைக் காணவில்லை. ஸாக்ஷாத் சந்த்ரகலாதரனைக் கண்டார். ஆனந்தக் கண்ணீர் பெருக பலவாறு துதித்தார். இதனால் ப்ரஸன்னரான ஈச்வரனும் "நீர் ஞானிகளுக்குள் மிகச்சிறந்தவராக விளங்குகிறீர். உம்முடைய ஞானநிஷ்டை நன்கு பரிசோதிக்கப்பட்டது. ஸ்ரீ வேத வியாஸருக்கொப்பான மஹிமையுள்ளவரானதால் உபநிஷத் வாக்யங்களின் தாத்பர்யத்தை நிர்ணயம் செய்து கொடுக்கிற ஸ்ரீ வியாஸருடைய ப்ரஹ்மஸூத்ரங்களுக்கு பாஷ்யம் இயற்றி ச்ருதி யுக்தி அநுபவங்களால் த்வைதிகளை ஜயித்து அத்வைத ஸித்தாந்தத்தை எங்கும் பரவச்செய்து, சிஷ்யர்களை ஆங்காங்கு ஸ்தாபித்து என் ஸ்தானம் வருவாயாக. உன் பாஷ்யம் தான் எல்லா உலகங்களிலும் எல்லோராலும் கொண்டாடப்படும்." என்று அநுக்ரஹம் செய்து மறைந்துவிட்டார்.

இவ்விதம் ஈச்வரனுடைய அநுக்ரஹம் பெற்று "ஸூத்ரபாஷ்யம்" இயற்றுவதில் ஆவலுள்ளவராக

சிஷ்யர்களுடன் பதரிகாச்ரமம் சென்று அங்கு வஸிக்கும் ப்ரஹ்ம நிஷ்டர்களுடன் கொஞ்சகாலம் உபநிஷத்துக்களின் அர்த்தத்தை பரிசீலனம் செய்து வ்யாஸ ஸூத்ரங்களுக்கு சிறந்த பாஷ்யமியற்றினார். சொல், பொருள் முதலியவற்றில் காம்பீர்யமுள்ளதும், உபநிஷத்து, ஸூத்ரங்களின் தாத்பர்யத்தை நன்கு வெளியிடுகின்றதும் வாசிக்கும்பொழுதே கேட்கிறவர்களுக்கும் படிக்கிறவர்களுக்கும் ப்ரதிபத்தியைக் கொடுக்கின்றதுமான இந்த பாஷ்யத்தைப் பார்த்து குமாரிலபட்டர் மிகுந்த குதூஹலத்துடன் அப்பாஷ்யத்திற்கு மட்டும் எண்ணாயிரம் வார்த்திகம் எழுதலாமென்று சொன்னார். இவ்விதமான பாஷ்யத்தின் மஹிமையை யாரால் அளவிட்டுக் கூற முடியும்! இதுபோலவே உபநிஷத்துக்களுக்கும் கீதைக்கும் பாஷ்யம் இயற்றி அநேக அத்வைத க்ரந்தங்களையும் செய்தார். எல்லாவற்றையும் சிஷ்யர்களுக்கு சொல்லி வைத்தார்.

तृतीयः श्लोकः ॥

साधुबोधितमातृसंमतियोगमेत्रितयोगिराट्
नर्मदाजगनिग्रहग्रहदेशिकानुमतो गुरुः ।
गाङ्गरोधसि संवसन्मुनिमण्डलैः परिशीलयन्
सूत्रवेदशिरस्सुगीतसनत्सुजातसहस्रकम् ॥ ३ ॥

॥ व्याख्या ॥

साध्विति । साधुभिः त्रितलागस्त्यादिमहर्षिभिः बोधितः निवेदितकर्तव्यः । स चासौ माता च निर्माता परमेश्वरः तद्-

भिन्नाचार्यः। साध्व्या आकाशवाण्या बोधितः निवेदितकृष्ण-
विग्रहस्थापनश्च। संमत्यै संमतिं संन्यासानुमतिं संपादयितुं
योगः उपायः यस्य सः 'तुमर्थाच्च भाववचनात्' इति चतुर्थी।
सेवितयोगिराट् सेवितः स्थलान्तरस्थापनरूपकैंकर्येण उपासितः
योगिराट् कृष्णः येन सः 'यत्र योगीश्वरः कृष्णः' इत्युक्तेः।
किं च, साधु यथा तथा बोधिता चासौ माता च जननी तस्याः
संमतिः संन्यासानुमतिः यस्य स चासौ योगसेवितयोगिराट् च।
योगेन योगमार्गेण सेवितः स्तुतिनत्यादिभिः उपासितः योगि-
राट् श्रीगोविन्दभगवत्पादाचार्यः येन सः। अयं पाद आवर्तितः
नर्मदेति। नर्मदाया झरः प्रवाहः तस्य निग्रहः कमण्डलौ
कृत्स्नप्रवाहान्तर्भावनम्, तेन ग्रहः अयमेव श्रीव्यासाचार्योक्तः
ब्रह्मसूत्रभाष्यकरणसमर्थशिष्यः इत्याकारकज्ञानम् यस्य स
चासौ देशिकश्च श्रीगोविन्दगुरुः तेनानुमतः अनुमतकाशी-
गमनादिः सन् गुरुः शंकरगुरुः गाङ्गरोधसि गङ्गातीरे काश्या-
मित्यर्थः। संवसन् संतोषेण वसन् मुनीनां मननशीलानां भविष्य-
द्वृत्त्या श्रवणमननयोग्यानामिति यावत्। पद्मपादादिशिष्याणां
मण्डलैः समूहैः सेवित इति शेषः। श्रीविश्वनाथात् प्राप्तवरस्य
बदरिकाश्रमप्राप्त्यनन्तरवृत्तमाह — गाङ्गरोधसि बदरिकाश्रमे
संवसन् मननशीलैः महर्षिमण्डलैः सह वासं कुर्वन् तैः सह
संप्रदायरक्षणार्थं परिशीलयन् उपनिषदादिविचारं कुर्वन्नित्यर्थः।
सूत्रेति। सूत्राणि ब्रह्मसूत्राणि, वेदशिरांसि उपनिषदः, सुगीतं

भगवद्गीता, सनत्सुजातः सनत्सुजातीयं सहस्रं विष्णुसहस्रनामस्तोत्रम् । तेषां समाहारद्वन्द्वः, स्वार्थे कः । अस्य च परिशीलनकर्मत्वेन यथायथमन्वयः । एवं परिशीलनं कृत्वा भाष्यं चकार ॥

अपरा योजना — सूत्रं ब्रह्मसूत्रं, वेदशिरांसि उपनिषदः तासु गीतः निर्गुणसगुणरूपः परमेश्वरः सनत् सनातनः नित्यः सुजातसहस्रकः भक्तपरिपालनाय परिगृहीतानेकदिव्यमङ्गळविग्रह इत्यर्थः । साक्षात् परमेश्वर एव भक्तपरिपालनायावतीर्णः सन् वेदसंप्रदायसिद्धसंप्रदायप्रवर्तनार्थं अनेकधर्माचरणं नाटयतीति गुरोरैश्वर्यमाहात्म्यं प्रतिपाद्यते । अत्रेदमवश्यमवधेयम् — पूर्वं गोविन्दगुरुणा अनन्तरं परमेश्वरेण ततो व्यासाचार्येण ततः उभयभारत्या जैमिन्याचार्येण च परतत्त्वरूपेणैव श्रीशंकरो व्यवह्रियते ॥

ஸ்ரீ சங்கரர் ஸாதுக்களான த்ரிதலர் அகஸ்த்யர் முதலிய மஹரிஷிகளால் பின்னால் நடக்கவேண்டிய அவதார கார்யங்களை தெரிவிக்கப்பட்டவராய் ஸந்யாஸம் பெற்றுக் கொள்ள மாதாவின் அநுமதியைப்பெற உபாயத்தை ஆலோசித்து அதன் பிரகாரம் மாதாவின் அநுமதியைப் பெற்று அவளுக்கு உபதேசம் செய்து ஆகாசவாணியால் தெரிவிக்கப்பட்ட க்ருஷ்ண விக்ரஹத்தை ப்ரவாஹத்தால் இடைஞ்சலில்லாத வேறிடத்தில் ஸ்தாபித்து யோகீச்வரரான க்ருஷ்ணனை பூஜித்து யோகசக்தியால் ஸஞ்சாரம் செய்து நர்மதாதீரம் சென்று யோகிராஜரான ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரை வணங்கி ஸ்தோத்ரம் செய்தார்.

நர்மதா நதியின் பிரவாஹத்தை கமண்டலுவில் அடக்கினதால் "ஸ்ரீவியாஸரால் கூறப்பட்டவர் இவர்தான். பிரஹ்ம ஸூத்ரங்களுக்கு பாஷ்யம் செய்யத்தகுந்தவர்" என்று அறிந்து கொண்ட தேசிகரான ஸ்ரீ கோவிந்த பகவத்பாதரால் உபதேசம் செய்யப்பெற்று ஸ்ரீ சங்கரர் அவரால் அநுமதிக்கப்பட்டவராய் காசிக்கு சென்று ஸந்தோஷமாக வஸித்துக்கொண்டு பத்மபாதர் முதலிய சிஷ்யர்களால் ஸேவிக்கப்பட்டவராய் ஸ்ரீ விச்வநாதரிடமிருந்து வரங்களை பெற்று பதரிகாச்ரமம் சென்று கங்கா தீரத்தில் முனிவர்களுடன் சிஷ்ட ஸம்பிரதாயத்தை பரிபாலனம் செய்வதற்காக உபநிஷத்து, ப்ரஹ்ம ஸூத்ரம், பகவத்கீதை, ஸனத்ஸுஜாதீயம், விஷ்ணுஸஹஸ்ரநாம இவைகளையும் பரிசீலனம் செய்து பாஷ்யமியற்றினார். ஸூத்ரம் உபநிஷத் முதலியவைகளில் ப்ரதிபாதிதமான நித்யமான பரமாத்ம வஸ்துவே பக்தர்களை காப்பாற்றுவதற்காக இவ்விதம் அவதரித்து திவ்யமங்கள விக்ரஹத்துடன் விளங்குகிறார்.

॥ षष्ठसर्गावशिष्टकथा ॥

बहुषु शिष्येषु मध्ये सनन्दनादयः शमादिगुणैः मुख्यशिष्यतां आपन्नाः । तत्रापि सनन्दनः अधीतभाष्योऽपि पुनः पुनः अतिगहनार्थविवित्सया पिपठिषुर्बभूव । तत्स्वभावं भक्त्यतिशयं च वीक्ष्य शंकरः तं स्वकीयसर्वग्रन्थजातमपि त्रिवारमध्यापयामास । तेन च इतरशिष्याः एवं नास्मानध्यापयति इति असूयाळवो बभूवुः । तदसूयामपनिनीषुः श्रीमदाचार्यः कदाचित् गङ्गापरतीरस्थसनन्दनं आहूतवान् । सोऽपि नावमन्तरेण गुरुभक्तिमेव

मेव मया एवमुक्तम् । अतिदुर्गमक्षेत्राणि विहाय अन्यत्र गच्छ । मा याहि मार्गे विना सहायम् । चोरसंचारमार्गे मा संचर । विप्रावासस्थान एव वस । सद्भिः सङ्गं विधत्स्व । सन्तो हि नित्यं सुखयन्ति वाक्यैरध्यात्मपरैः । यथामनोरथं यात्रां कृत्वा क्षेमेण पुनरागच्छ' इत्युक्त्वा अनुज्ञां ददौ ॥

एवं गुरोः हिततममुपदेशं शिरसि वहन् सरोजपादः ततः प्रतस्थे । तदनन्तरं गुरुवरोऽपि शृङ्गाद्रावेव सुरेश्वराद्यैः सह कंचित् कालं वसन् आसन्नमरणां मातरं दिव्यदृष्ट्या ज्ञात्वा तत्काले स्वसान्निध्यस्य आवश्यकतां विनिश्चित्य योगबलेन तत्क्षणमेव मातुः समीपं प्राप्य आतुरां जननीं दृष्ट्वा खिन्नचेताः तस्याश्चरणौ वन्दित्वा 'मातः अहमहमस्मि । यत्कर्तव्यं तत् ब्रूहि । त्यज शोकं' इत्यवदत् । सा च बहोः कालादनन्तरमागतं तनयं पश्यन्त् हृष्टान्तरङ्गा 'आयुष्मन् यदस्यामवस्थायां कुशलीभूय मद्दृष्टिगोचरोऽसि नातः परं कृत्यमधिकं वर्तते । नेतः परमिदं शरीरं जीर्णं वहनक्षमम् । अतः साधुकृत्यस्त्वं शास्त्रविधानेन मां संस्कृत्य प्रापय पुण्यलोकं' इति अवोचत् ॥

तदानीं मातुर्वाक्यमारमवधार्य तद्भाग्यसारभूतः शंकरः परमाचार्यो भूत्वा परमात्मतत्वमुपदिदेश । 'न च निर्गुणे वस्तुनि रमते मम मनः । अतः सगुणं वस्तु वद' इति मातुर्वचनमाकर्ण्य गुरुवरो नितान्तभक्त्या भुजङ्गवृत्तेन भुजङ्गभूषणं तुष्टाव । तेन च

तमसि परमेश्वरः स्वदूतान् प्रेषयामास । शूलादिपाणीन् तान् दृष्ट्वा भीता सा नैतानानुगच्छेयमित्युवाच । ततस्तान् विनयोक्त्या प्रेषयित्वा मधुरं माधवस्वरूपमुपदिदेश । तत्स्वरूपं हृदये धारयन्ती पुत्रमपि प्रशंसन्ती शरीरमपि त्यजन्ती विष्णुदूतैर्विमानवरेण सबहुमानं नीयमाना वैकुण्ठलोकं प्राप्तवती । गुरुरपि स्वयमेव संस्काराय व्यवसितः बन्धुवर्गमाजुहाव । स च बन्धुवर्गः बहु विनिन्दन् अनधिकारिणा कथं संस्क्रियेत इति न वह्निमपि अर्पयन्ति स्म । निर्ममोऽपि गुरुः कोपपरीतः दक्षिणपाणिमथनेन जनितवह्निना काष्ठानि समूह्य मातरं ददहति स्म । बन्धुवर्गं च शापवाण्या ग्लपयति स्म । वेदबाह्यत्वं यतिभिक्षानर्हत्वं गृहसमीपदाहत्वं च यत् शापप्राप्तं ज्ञातीनां तदद्यापि दृश्यते ॥

एवमर्चिरादिमार्गेणापुनरावृत्तिस्थानं मातरं प्रापय्य दिग्विजययात्रायै सनन्दनादिशिष्यप्रवरान् प्रतीक्षमाणः केरलदेशेषु संचरति स्म । श्रीपद्मपादाचार्योऽपि औत्तरतीर्थानि बहूनि सेवित्वा क्रमेण कालहस्तीश्वरं सुवर्णमुखीं काञ्चीनगरं चिदम्बरक्षेत्रं च सेवमानः, क्रमेण चोलदेशं प्राप्य, कावेरजायां स्नात्वा श्रीरङ्गनाथं संसेव्य, पूर्वाश्रममातुलेन बहुप्रकारमनुनीतः सन् तद्गृहं जगाम । तदागमनवृत्तान्तं श्रुत्वा, बहोः कालादनन्तरमागतस्य तस्य दर्शनार्थमागताः बन्धुजनास्तं दृष्ट्वा संतुष्टमानसा आनन्दाश्रु विमुञ्चन्तः तेन साकं नानाविधं संलापं कुर्वाणाः,

तदीयवैराग्यपाण्डित्यादीन् प्रशंसन्तः स्तुतिनत्यादिभिः सादरं तं पूजयामासुः । पद्मपादोऽपि गार्हस्थ्याश्रममाहात्म्यवर्णनेन स्वधर्मनिष्ठान् तान् प्रशशंस ॥

अथ मातुलगृहे भिक्षां समाप्य संभाषणसमये शिष्यहस्तस्थं पुस्तकभारं दृष्ट्वा किमिदमिति मातुलेन पृष्टः तस्मै भाष्यं टीकां च दर्शयामास । स च टीकां सम्यगवेक्ष्य तदीयबुद्धिपाटवं चालोच्य स्वाभिमतं गुरुमतमपि खण्डितमत्रेति अन्तरसूयाविष्टोपि वहिः ग्रन्थाभिनन्दनमभिनयति स्म । एतद्ग्रन्थस्याप्रचारे उपायं च मनसि चिन्तयामास । अविजानन् मातुलहृदयं पद्मपादः पुस्तकभारोऽत्रैवास्तु । सेतुयात्रां निर्वर्त्य पुनरागमिष्यामि इत्युक्त्वा तत्काले सञ्जातं वामाक्षिस्पन्दादिदुर्निमित्तमपि अनालोच्य ततः प्रतस्थे ॥

पद्मपादः मध्येमार्गं तत्र तत्र तीर्थेषु स्नानादिकं कुर्वाणः क्रमेण दर्भशयनं गत्वा अनन्तरं सेतुं दृष्टवान् । महनीयतमे तत्तीर्थे स्नात्वा भक्त्या श्रीरामनाथं प्रणम्य जनानां भक्तिश्रद्धाभिवृद्धये सेतुमाहात्म्यं वर्णयामास । तत्र च केनचित् पृष्टः रामेश्वरशब्दस्य समासत्रैविध्यं पक्षभेदेनेत्थं प्रदर्शयामास— 'रामः तत्पुरुषं, शिवो बहुव्रीहिं, इन्द्रादयः कर्मधारयं च मन्यन्ते । त्रयाणामपि तत्वैकत्वे तात्पर्यं' इति । एवं हितं उपदिशन् पद्मपादः

सर्वैरुपास्यमानः कंचित्कालं तत्रोषित्वा ततः प्रस्थाय तीर्थसेवया पवित्रहृदयः नानादेशान् पश्यन् पुनरपि प्राप मातुलगृहम् ॥

मातुलस्तु अस्य प्रस्थानसमनन्तरमेव स्वाभिमतदूषकमेतं ग्रन्थं युक्त्या दूषयितुमसमर्थः सन् दुष्टबुद्धिः पुस्तकदाहकरणं मनसि निश्चित्य तत्प्रकाशाय पुस्तकभारसहितं स्वीयं गृहं वह्निना दग्ध्वा स्वसिद्धान्तखण्डनपरस्यास्य ग्रन्थस्य विनाशेन नितरामन्तः संतुष्टोऽभवत् । पुनः प्रत्यागताय पद्मपादाय खेदं बहिः प्रकटयन् गृहदाहं पुस्तकनाशं च महत्कृपया संज्ञानं निवेदयामास । श्रुत्वा च तद्वचनं पद्मपादः तदीयमाशयमजानानः ग्रन्थविनाशेन सर्वस्वविनाशं प्राप्त इव महान्तं विषादमगमत् । मातुलस्तु पुनरप्येतादृशग्रन्थकरणभिया भिक्षया साकं मतिमान्द्यकरमौषधं दत्त्वा कृतार्थमात्मानं मेने । तेन पद्मपादः संमूढचेताः सविषादं तस्मिन् काले समागतैरन्यैः शिष्यैः साकं स्वगुरुसमीपं गन्तुमिच्छन्, तत्संचारस्थलं ब्राह्मणमुखादवगत्य तत्र जगाम ॥

गुरुवर्यस्तु मातृसंस्कारानन्तरं सर्वत्र निस्पृहः केरलदेशेषु संचरन् महासुरालयेशं सभक्तिविनयं प्रणम्य तदीयविविधमहिमानमभिष्टुवन् तत्रावर्तत । तस्मिन् समय एव तदीयाः शिष्याः सर्वेऽपि चिरकालं गुरुवियोगेन क्लान्तहृदयाः तत्समीपमागत्य गुरुदर्शनेनानन्दपरवशा ववन्दिरे । दयासमुद्रो गुरुरपि श्रान्तहृदयान् शिष्यगणान् कुशलप्रश्नसंभाषणैः सान्त्वयामास ।

अत्रान्तरे श्रीपद्मपादोऽपि टीकालोपादिकं स्वीयं सर्वं वृत्तान्तमपि निवेद्य टीकाप्रचारे अनुग्रहं प्रार्थयामास । गुरुरपि भवदीय-टीकायां या पद्मपादी मत्समीपे पूर्वं वाचिता सा इदानीं स्मर्यते । आदितस्तां कथयामि, लिखयतां इत्युक्त्वा पूर्वयैवानुपूर्व्या आचख्यौ । पद्मपादोऽपि गुरूक्तं सर्वं विलिख्य पश्यन् परमानन्द-मनुबभूव । तथैव केरळराजोऽपि स्वकृतं नाटकत्रयं नष्टं गुरु-मुखात् प्राप्य ननन्द ॥

॥ पञ्चदशसर्गकथा ॥

ततः कदाचित् श्रीगुरुः सहस्रसंख्यैः शिष्यगणैः परिवृतः सुधन्वना च राज्ञा अनुयातः सन् दिग्विजयाय प्रतस्थे । तत्र प्रथमं सेतुं प्राप्य तत्रत्यान् अवैदिकमार्गं त्याजयन् वैदिकं च मार्गं ग्राहयन् श्रीरामनाथमभिपूजयन् कंचित्कालमुवास । ततः चोळपाण्ड्यदेशेषु सञ्चारं कृत्वा तत्र विमतस्थान् जित्वा काञ्चीनगरं प्राप । तत्र श्रीकामाक्षीदेव्याः विचित्रं विशालं आलयं निर्माप्य वैदिकपूजासंप्रदायं प्रवर्तयन् तत्रागतान् बहुशिष्यगणान् यथायथ-मनुगृह्य श्रीवेङ्कटाचलपतिं संपूज्य विदर्भदेशं प्राप्तः तद्देशाधि-पतिना पूजितः तत्प्रान्तवर्तिनः ब्रह्मद्वेषिणः अतिघोरान् भैरवो-पासकान् विजित्य पश्चिमसमुद्रतीरे बहुत्र सञ्चारं कृत्वा गोकर्ण-क्षेत्रं प्राप्य श्रीपार्वतीपतिं स्तुतिनत्यादिभिः पूजयन् शिष्यान् अध्यापयन्नासीत् ।

तदा श्रीहरदत्ताचार्यमुखादिमं वृत्तान्तमवगत्य वादार्थमागतं श्रीकण्ठाचार्यं श्रुतियुक्तिशरैर्विजित्य शरणागतेन तेन पूजितः सौराष्ट्रदेशेषु स्वभाष्यं प्रचार्य द्वारवतीं गत्वा वैष्णवशैवशाक्तसौरमुखान् वशंवदीकृत्य उज्जयिनीं प्राप्य भगवन्तमाराध्य तत्रत्यं दिगन्तविश्रान्तकीर्तिं वादिभयङ्करं श्रीभट्टभास्करनामानं पण्डिताग्रेसरमपि वादे अजयत् । ततः अवन्तिषु सञ्चरन् प्रसिद्धान् बाणमयूरादीन् स्वभाष्यश्रवणोत्सुकान् विधाय जैनान् बौद्धांश्च विजित्य नैमिशे भाष्यं प्रचारयन् कुरुपाञ्चालशूरसेनादिषु विजयं प्राप्य शाक्तभाष्यकारमभिनवगुप्ताचार्यं जित्वा विदेहकोसलैरर्चितः अङ्गवङ्गेषु आत्मकीर्तिं प्रसार्य मुरारिमिश्रं उदयनाचार्यं धर्मगुप्तमिश्रं च विजित्य गौडेष्वपि स्वयशो गापयामास ॥

॥ षोडशसर्गकथा ॥

एवं वादिनिकरान् शान्तदर्पान् स्ववशंवदान् विधाय दिग्विजयेन जजीयमानस्य गुरोरुत्कर्षमसहमानः अभिनवगुप्तः असूयाविष्टः आभिचारप्रयोगेन गुरोः शरीरे भगन्दररोगमुत्पादयामास । तेन च अनवरतस्रवद्रक्तधारादूषितशाटीक्षालनादिकं अन्यच्च गुरोः शरीरशुश्रूषादिकं अजुगुप्सितेन मनसा श्रीतोटकाचार्यश्चकार । निरभिमानो गुरुः दुस्सहमपि रोगपीडाश्रमं सोढ्वा यथापूर्वमासीत् । न रोगनिवारणे स्वयं प्रयत्नमकरोत् । शिष्यगणास्तु गुरोः संजातं रोगविकारं दृष्ट्वा नितरां विषण्णाः निर्बन्धेन

चिकित्सने गुरोरनुमतिं संपाद्य तत्र तत्र गत्वा राजस्थानात् भिषग्वरानानीय दर्शयामासुः । ते च निपुणा अपि विफलप्रयत्नाः प्रतिनिवृत्ताः । गुरुस्तु आदिभिषक्तमं भगवन्तं स्मरहरमेव सर्वदा स्मरति स्म । तदानीमेव श्रीपरमेश्वरप्रेषितौ अश्विदेवौ गुरुसमीपमासाद्य नायं चिकित्सानिवर्त्यो रोगः, किं तु आभिचारकृत इत्यूचतुः । एतत् श्रुत्वा पद्मपादाचार्यः गुरुणा निवारितोपि परकृत्यानिवर्तकमन्त्रजपादिना गुरोः शरीरात् तं रोगं प्रयोक्तारमभिनवगुप्तमेव प्रापयामास । सोऽपि महदपचारफलं प्राप्तवान् ॥

एवं विनिवृत्तरोग आचार्यः कदाचित् सायं गङ्गातीरे ब्रह्मानुसन्धानपर आसीत् । तदा यदृच्छया तत्रागतं परमगुरुं श्रीगौडपादाचार्यं दृष्ट्वा ससंभ्रममभिगम्य पादयोः पतितः विविवत्सपर्यां विधाय साञ्जलिबन्धं तस्य पुरस्तादतिष्ठत् । स च प्रत्यक्तत्त्वानुसन्धानविद्याप्रचारादिकं पृष्ट्वा 'गोविन्दमुखात् सूत्रभाष्यादिनिबन्धकरणवृत्तान्तं श्रुत्वा महता हर्षेण त्वां द्रष्टुमहमागतः' इत्युक्तवान् । श्रीशंकराचार्यः स्वकीयं भाष्यादिग्रन्थजातं माण्डूक्यकारिकाभाष्यसहितं श्रावयामास । 'मदीयो भावस्सर्वोऽपि सम्यक् भाष्ये प्रदर्शितः । तेन संतुष्टोऽहं वरं ददामि । यथाभीप्सितं व्रियताम' इति परमगुरुणा उक्तो भगवत्पादः 'श्रीशुकाचार्यावतारभूतानां पूज्यपादानां दुर्लभदर्शनानां भवतां दर्शनादन्यत् किं वरणीयं वर्तते । इदानीं दर्शन-

लाभेन कृतार्थः सञ्जातोऽहम् । अथापि एतत् प्रार्थये — ‘मदीयं चित्तं सर्वदा चित्तत्वचिन्तनपरमेव भवतु’ इति सविनयमुवाच । श्रीमदाचार्या अपि तथा इति अनुगृह्य अन्तर्दधिरे ॥

ஸ்ரீ குருவானவர் சிருங்ககிரியில் வாஸம் செய்யும் பொழுது அவரிடம் மிகுந்த பக்தி கொண்டவரும் சிறந்த வினயம் முதலான நற்குணங்கள் நிரம்பியவரும் வஸ்திர சோதனம் முதலான குருவின் பணிவிடைகளை செய்வதிலேயே எப்பொழுதும் ஈடுபட்டவரும் குருவின் ப்ரீதியை பெற்றவருமான ‘கிரி’ என்ற சிஷ்யர் ஒருவர் இருந்தார். ஒரு நாள் பாடம் ஆரம்பிக்கும் சமயம் கிரியைத் தவிர மற்ற எல்லா சிஷ்யர்களும் வந்துவிட்டார்கள். ஆசார்யாளும் வந்து உட்கார்ந்து விட்டார்கள். அந்த சமயம் கிரி நதிதீரத்தில் ஆசார்யாளின் வஸ்திரத்தை சோதனம் செய்து கொண்டிருந்தார். அதனால் ஆசார்யாள் பாடம் ஆரம்பிக்கவில்லை. பத்மபாதர் பாடம் ஆரம்பமாவதில் தாமதத்தை பொறுக்காமல் பாடம் சொல்லவேணுமென்று பிரார்த்தித்தார். கிரியும் வரட்டுமென்று ஆசார்யர் சொன்னார். அதன்மேல் பத்மபாதர் பாடத்தை கிரி கேட்டாலும் கேட்காவிட்டாலும் ஒன்றுதான் என்று கிரியை இகழ்ந்து கூறினார். இதைக் கேட்டு கிரியிடம் மிகுந்த கருணை கொண்டவராய் கிரிக்கு எல்லா வித்யைகளும் கிடைக்க வேண்டுமென்று தன ஸங்கல்பத்தாலேயே குரு அனுக்ரஹம் செய்தார் அக்கக்ஷணமே நதியிலிருக்கும் கிரி எல்லா வித்யைகளையும் பெற்றவராய் குருவின் மஹிமையைக் காட்டுகின்றதும் உபநிஷத்துக்களின் தாத்பர்யத்தை

வெளியிடுகின்றதுமான தன்னால் செய்யப்பட்ட தோடக விருத்தத்திலமைந்த சுலோகங்களை சொல்லிக்கொண்டே குருவின் ஸமீபம் வந்தார். இதைப்பார்த்து பத்மபாதர் முதலியவர்கள் கர்வத்தை விட்டு குருவின் மஹிமையை ஸ்தோத்ரம் செய்தார்கள். அதுமுதல் தோடக விருத்தத்தில் சுலோகம் செய்த காரணத்தால் 'தோடகர்' என்று பெயர் இவருக்கு ஏற்பட்டது.

## 13-வது ஸர்க்க ஸங்கிரஹம்.

ஒரு ஸமயம் ஸுரேச்வரர் ஸ்ரீ குருவின் சமீபம் வந்து "குருவின் ஆக்ஞையை நிறைவேற்றுபவனுடைய பிறவி தான் பயனுள்ளதென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. தங்களுடைய ஆக்ஞையை நிறைவேற்றி கிருதார்த்தனாக வேண்டுமென்று விரும்புகிறேன். உத்தரவு செய்யவேண்டு மென்று பிரார்த்தித்தார் தேசிகரும் எல்லாசாஸ்திரங் களையும் நன்கு கற்றுணர்ந்தவரும், குமாரிலபட்டராலும் தன்னைவிட மேலானவராக கூறப்பட்ட இவர்தான் எனனுடைய பாஷ்யத்திற்கு வார்த்திகமியற்றத் தகுந்த வர் என்று மனதில் தீர்மானித்து, என்னுடைய ஸூத்ர பாஷ்யத்திற்கு வார்த்திகமியற்றுங்கள், இதுவே எனக்கு மிகவும் விருப்பமான கார்யம் என்று கூறினார். "ஆழ்ந்த கருத்துக்கள் நிறைந்த தங்களுடைய பாஷ்யத்திற்கு வார்த்திகம் செய்வதற்கு எனக்கு கொஞ்சமும் சக்தியில்லை. ஆனாலும் தங்களுடைய அநுக்ரஹபலத்தால் யதாசக்தி முயற்சிக்கிறேன்" என்று கூறி ஸுரேச்வரர் வார்த்திகம் இயற்ற ஆரம்பித்தார்.

இந்த சமயம் பத்மபாதருக்கு மிகவும் வேண்டியவர்களான சித்ஸுகாசார்யர் முதலியவர்கள தனிமையில் வந்து குருவிடம் தெரிவித்தார்கள் —"ப்ரபோ தங்களுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. இந்த விச்வரூபர் பெரிய கர்மடர். பட்டபாதருடைய சிஷ்யரான இவர் அவருடைய ஸித்தாந்தத்தில் மிகவும் ஈடுபட்டவராய் ஸந்யாஸ சாஸ்த்ரத்தையே அர்த்தவாதமென்றும் அல்லது கர்மாக்கள் செய்வதற்கு சக்தியில்லாத குருடர் நொண்டி முதலியவர்கள் தான் ஸந்யாஸத்தைக் கைக்கொள்ளலாமென்று தீர்மானித்திருக்கிறார் உலகத்தில் எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிற ஈச்வரனையே நிராகரணம் செய்தவர். பிக்ஷைக்காக யதிகள் வீட்டில் நுழைவதை ஸஹிக்காதவர். இப்பொழுது இவர் ஸந்யாஸியாயிருந்து கட ஸித்தாந்தத்தை அனுஸரித்த போதிலும் இதைக்கொண்டு இவருடைய மனது மாறிவிட்டதென்று நம்பமுடியாது. வாதத்தில் தோற்றுப்போனதால் வேறு கதியில்லாமல் ஸந்யாஸத்தைக் கைக்கொண்டிருக்கிறார். இவருக்கு பாஷ்யவார்த்திகமியற்றும்படி அனுமதிகொடுத்தால் தன புத்தித் திறமையால் பாஷ்யத்திற்கு கர்மஸித்தாந்தத்தில்தான் தாத்பர்யமென்று ஸ்தாபித்து விடுவார். வார்த்திகம் செய்யவேண்டும் என்று தங்களுக்கு அபிப்ராய மிருக்குமானால் பத்மபாதரைக்கொண்டு நிறைவேற்றலாம். இவர் தங்களுடைய முக்ய சிஷ்யர். ப்ரஹ்மசர்யாச்ரமத்திலிருந்தே ஸந்யாஸத்தை கைக்கொண்டவர். முன்னால் எல்லா சிஷ்யர்களும் கங்கையின் அக்கரையிலிருக்கும்பொழுது தாங்கள் அவஸரகார்யமாக சிஷ்யர்களை கூப்பிட்டதும் மற்றவர்கள்

எல்லோரும் கங்கையைக் கடப்பதற்கு ஓடத்தைத் தேடிச் சென்றார்கள் இவர் மட்டும் தங்கள் குரல் காதில்பட்ட வுடனே ப்ரவாஹத்தைக்கூட கவனியாமல் கங்கையில் இறங்கிவிட்டார். இவருடைய குருபக்தியைப் பார்த்து கங்காதேவி இவர் கால்வைக்குமிடத்திலெல்லாம் தாமரைப் புஷ்பத்தால் இவரைத் தாங்கிக்கொண்டாள். இவ்விதச் சிறப்புவாய்ந்த பத்மபாதர் தங்கள் அபிப்ராயத்தை வார்த் திகத்தில் நன்றாக காண்பிப்பார். ஹஸ்தாமலகரும் வார்த் திகமியற்றத்தகுந்தவர். அத்வைதாத்ம தத்வத்திலே எப் பொழுதும் ஈடுபட்ட இவருடைய சுலோகங்கள் உள் ளங்கை நெல்லிக்கனிபோல ஔபநிஷதமான அத்வைத ஸித்தாந்தத்தை நனகு எடுத்துக் காட்டுவதால் சந்தோஷ மடைந்த தாங்கள் இவருக்கு ஹஸ்தாமலகரென்று பெய ரிட்டீர்கள். ஆகலால் வார்த்திகமியற்ற ஸுரேச்வரருக்கு அனுமதி கொடுக்கக்கூடாது" என்று கூறினார்கள்.

இதைக்கேட்டு ஆசார்யர் "ஹஸ்தாமலகர் பிறந்தது முதல் ஆத்ம ஸ்வரூபத்திலேயே மனதைச்செலுத்தியவர். மற்றவர்களைப்போல இவருக்கு குழந்தை விளையாட்டோ அக்ஷராப்யாஸமோ, உபநயனமோ, வேதாத்யயனமோ, வித் யாப்யாஸமோ, ஒன்றும் கிடையாது. இவருடைய உண்மை நிலையைத் தெரிந்துகொள்ளாமல் ஜடமென்று நினைத்து இவருடைய தந்தை இவரை என் ஸமீபம் அழைத்துவந் தார். 'நீ யார்? ஏன் ஜடம் போலிருக்கிறாய்' என்று நான் கேட்டதும் பிறந்தது முதல் வாயைத்திறந்து பேசாதவர் மௌனத்தைக்கலைத்து தான் எப்பொழுதும் அனுஸந்தானம்

செய்கின்ற ஆத்மதத்வத்தை சுலோகங்களால் நன்கு வெளியிட்டார். இதைப்பார்த்து தந்தை 'இவன் உங்களுடனேயே இருக்கட்டுமென்று கூறிச்சென்றார். எப்பொழுதும் ஆத்ம ஸ்வரூபானுஸந்தானத்திலேயே ஈடுபட்ட இவருடைய மனது கிரக்தமியற்றுவதில் எப்படிச் செல்லும்" என்று சொன்னார்.

இதைக் கேட்டு சிஷ்யர்கள் "ப்ரபோ, ச்ரவணம் முதலிய உபாயங்கள் ஒன்றையும் அனுஷ்டிக்காமல் இவருக்கு எவ்விதம் ஆத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டது" என்று கேட்க ஆசார்யர் அவருடைய கதையை கூற ஆரம்பித்தார். "முன் ஒரு ஸமயம் யமுனாதீரத்தில் யோகி ஒருவர் வாஸஞ்செய்து வந்தார். ஒரு நாள் பிராமணப் பெண் ஒருவள் இரண்டுவயதுள்ள தன சிறுகுழந்தையை யோகியின் அருகில் விட்டுவிட்டு 'கொஞ்சநேரம் இக்குழந்தையை கவனித்துக்கொள்ளுங்கள்' என்று சொல்லி அவருடைய பதிலை எதிர்பாராமல் தோழிகளுடன் ஸ்நானம் செய்யச் சென்றுவிட்டாள். ஸமாதியிலிருந்ததால் இதொன்றும் யோகிக்குத் தெரியாது. குழந்தை அங்கிருந்து தவழ்ந்து சென்று நதியில் விழுந்து ப்ரவாஹத்தால் அடித்துச் செல்லப்பட்டுவிட்டது. அப்பெண்மணி திரும்பி வந்துபார்த்து குழந்தையைக்காணுமல் பந்துக்களிடம் சொல்ல அவர்கள் வந்து எங்கும் தேடி கடைசியாக கொஞ்சதூரத்திற்கப்பால் கரையோரமாக ஒதுக்கப்பட்டிருந்த உயிரற்றகுழந்தையின் உடலைப்பார்த்து எடுத்துக்கொண்டுவந்து யோகியின் முன்னால் உட்கார்ந்துகொண்டு அழுதனர். அதனால் ஸமாதி கலைந்து கண்ணை விழித்துப்

பார்த்து நடந்த வரலாறை ஞானதிருஷ்டியால் அறிந்து அவர்கள் அபராதத்தை க்ஷமிக்காமல் கருணை கொண்டவராய் யோகசக்தியால் தன் உடலைவிட்டு குழந்தையின சரீரத்தில் புகுந்தார். அந்த யோகி தான் ஹஸ்தாமலகர். இவர் ஞானியாயிருந்தும ஜனங்களின் ஸங்கத்தால் மறுபடியும் பிறவி ஏற்பட்டுவிடுமோ என்ற பயத்தால் இதுவரை ஜடமபோல் அபிநயம செய்தார். இவருக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆனாலும் எப்பொழுதும் அந்தர்முகமாகவே இருக்கின்ற இவரை பஹிர்முகனாயிருந்து செய்யவேண்டிய கிரந்தமியற்றும் கார்யத்தில் எப்படி ஈடுபடுத்தமுடியும்? ஸரஸ்வதியாலும் சிலாகிக்கப்பட்ட ஞானமுடைய ஸர்வஞான ஸுரேச்வரரால் கிரந்த மியற்றமுடியும். இது உங்களுக்கு இஷ்டமில்லை. பலர் விரும்பாத காரியத்தை நிறைவேற்றுவதும் உசிதமல்ல. ஸுரேச்வரரைத்தவிற மற்றவர் வார்த்திக மியற்றுவது எனக்கு இஷ்டமில்லை. பத்மபாதரும் பாஷ்யத்திற்கு வியாக்யானம் இயற்றட்டும்" என்று கட்டளையிட்டார்.

பிறகு குரு தனிமையில் ஸுரேச்வரரைக் கூப்பிட்டு "நீங்கள் பூர்வாச்ரம பலத்தால் கர்மஸித்தாந்த பரமாக பாஷ்யத்திற்கு வியாக்யானம் செய்து விடுவீர் என்ற பயத்தால் தாங்கள் வார்த்திகம இயற்றுவதை மற்ற சிஷ்யர்கள் விரும்பவில்லை. ஆனதால் எல்லோருக்கும் நம்பிக்கையுண்டாகும்படியாக அத்வைத ஸித்தாந்தத்தை விவரிக்கும் ஸ்வதந்திரமான கிரந்தமொன்று செய்யுங்கள்" என்று கூறினார். ஸுரேச்வரரும் குருவின் ஆக்ஞையின் பேரில் "நைஷ்கர்ம்யஸித்தி என்ற கிரந்தமியற்றி குரு

ஷிடம் காண்பித்தார். அவரும் முழுவதும் பார்த்து சந்தோஷமடைந்து மற்றவர்களுக்கும் காண்பித்தார். அவர்களும் பார்த்து நம்பிக்கை யடைந்தவர்களாய் விபரீத எண்ணத்தை விட்டு ஸுரேச்வரருக்குச் சமமாக தத்வத்தை அறிந்த புத்திமான ஒருவருமில்லை என்று சொல்லிக்கொண்டார்கள். குருவும் தம் ஸூத்ரபாஷ்யத்திற்கு ஸுரேச்வரரால் வார்த்திகம் இயற்றமுடியாமல் போய்விட்டதே என்று தன் மனதில் ஏற்பட்ட வருத்தத்தை அடக்கிக்கொண்டு தைத்திரீயோபநிஷத்பாஷ்யத்திற்கும் பிருஹதாரண்யகோபநிஷத் பாஷ்யத்திற்கும் ஸுரேச்வரரைக் கொண்டு வார்த்திகம் இயற்றும்படி செய்தார். ஸுரேச்வரரைப் பார்த்து "நீர் மறுபிறவியில் வாசஸ்பதி மிச்ரர் என்ற பெயருடன் அவதரித்து பாஷ்யத்திற்கு வியாக்யானம் செய்யப்போகிறீர். அது எப்பொழுதும் விளங்கப்போகிறது. பத்மபாதருடைய டீகையில் முதலில் ஐந்து பாதங்களும் பிறகு நான்கு ஸூத்ரங்களும் தான் ப்ரஸித்தமாயிருக்கும். மீதி மறைந்துவிடும்" என்று கூறி அநுக்ரஹித்தார். ஸுரேச்வரரும் 'மற்றவர் இயற்றும் வார்த்திகம் மறைந்து போகவேண்டும்' என்று சாபம்கொடுத்தார். பத்மபாதர் பாஷ்யத்திற்கு டீகை எழுதி ஆசார்யரிடம் காண்பித்தார். ஆனந்தகிரி முதலான மற்ற சிஷ்யர்களும் அத்யாத்ம விஷயமான கிரந்தங்களை எழுதி குருதக்ஷிணையாக ஸமர்ப்பணம் செய்தார்கள்.

## 14-வது ஸர்க்க ஸங்கிரஹம்

பிறகு ஒரு சமயம் பத்மபாதர் தீர்த்தயாத்திரை செய்

வதில் மிகுந்த ஆசை கொண்டவராய் குருவின் அனுமதியை பிரார்த்தித்தார். ஆசார்யர் "குருவின் ஸமீபத்தில் வாஸம் செய்து கொண்டு அவருக்கு சுச்ருஷை செய்து கொண்டு அவருடைய உபதேசத்தைக் கேட்பதைவிட மேலானது ஒன்றுமில்லை. யாத்திரை செய்வதில் பல தோஷங்கள் இருக்கின்றன. தங்க இடம், தீர்த்தம் முதலான ஸௌகர்யங்களைத் தேடுவதிலேயே பொழுது கழிந்துவிடும். ஸ்னானம், ஆஹ்னிகம், ஸமாதி முதலான ஸ்வதர்மங்களை அந்தந்த காலத்தில் அனுஷ்டிக்க முடியாது. ஆஹாராதிகளும் உரிய காலத்தில் கிடைக்க வசதியில்லாததால் பலவித வியாதிகள் ஏற்பட்டு யாத்திரையே செய்ய முடியாமல் போய்விடும். வியாதி ஏற்பட்டு விட்டால் ஸஹாயத்திற்குக் கூட மனுஷ்யர்கள் இருக்கமாட்டார்கள்" என்று கூறினார். இதைக்கேட்டு பத்மபாதர் "தாங்கள் சொல்லுவது வாஸ்தவம் ஸந்தேஹமில்லை. ஆனாலும் என்மனம் பல தேசங்களையும் தீர்த்தங்களையும் க்ஷேத்ரங்களையும் பார்ப்பதில் மிகுந்த ஆவலுள்ளதாயிருக்கிறது. தாங்கள் சொல்லுவதுபோல வழியில் பல அஸௌகர்யங்கள் ஏற்படக்கூடும். அதை ஸஹித்துக் கொள்ளத்தான் வேண்டும் சிரமமில்லாமல் எவ்விதம் புண்யம் ஸம்பாதிக்கமுடியும்? முற்பிறவியில் செய்த பாபம் தான் இந்த ஜன்மாவில் ரோகம் முதலியவை மூலம் துக்கத்தைக் கொடுக்கிறது. அது எந்த இடத்திலிருந்தாலும் வந்தே தீரும். யாராலும் தடுக்கமுடியாது. யாத்திரையில் ஸ்னானாதி நியமங்களுக்கு ஸங்கோசத்தை ஸ்மிருதிகள் கூறுகின்றன. முக்கியமாக யாத்திரை செய்வதால்

ஆங்காங்கு வஸிக்கும் ஸாதுக்களுடையவும் வித்வான்களுடையவும் ஸங்கம் ஏற்படும். ஸத்ஸங்கம் மேலான சிரேயஸ்ஸைக் கொடுக்கும். ஆகையால் அநுமதி கொடுக்கவேண்டும்" என்று மறுபடியும் பிரார்த்தித்தார்.

இதைக்கேட்டு ஸ்ரீ குருவானவர் "யாத்திரை செய்வதில் மிகுந்த ஆவலிருக்குமானால் அவ்விதமே செய். உன் மனதைப் பரீக்ஷிக்கவே இவ்விதம் சொன்னேன். சரியான வழியில்லாத இடங்களுக்குச் செல்லவேண்டாம். துணையில்லாமல் தனியாக செல்லாதே. பிராமணர்கள் வஸிக்குமிடங்களில் தங்கு. ஸாதுக்களுடன் ஸங்கத்தை வைத்துக்கொள். அவர்கள் நல்ல உபதேசங்களால் எல்லோருக்கும் ஆனந்தத்தைக் கொடுத்து கைதூக்கி விடுகிறார்கள். உன் இஷ்டப்படி யாத்திரை செய்து க்ஷேமமாகத் திரும்பிவா" என்று அநுக்ரஹம் செய்து அநுமதி கொடுத்தார். இவ்விதம் ஸ்ரீ குருவின் ஹிதோபதேசத்தைக் கேட்டு சந்தோஷத்துடன் புறப்பட்டார்.

அதன் பிறகு குருவும் ஸுரேச்வரர் முதலிய சிஷ்யர்களுடன் சிருங்ககிரியில் வாஸம் செய்து வரும்பொழுது தன் தாயாருக்கு அந்த்யகாலம் நெருங்கிவிட்டதை ஞான திருஷ்டியால் அறிந்து அந்த சமயம் தான் பக்கத்தில் இருக்கவேண்டியது அவச்யம் என்று நினைத்து யோக சக்தியால் அந்த நிமிஷமே தாயாரின் ஸமீபத்தை அடைந்து அவளுடைய நிலைமையைப் பார்த்து வருந்தியவராய் "அம்மா, இதோ நான் வந்திருக்கிறேன். வருத்தப்படாதே. உனக்கு ஆகவேண்டிய காரியத்தைச் சொல்லு

-னே நிறைவேற்றுகிறேன்." என்று கூறினார். அவளும் வெகுநாள் கழித்து தன் ஸமீபம் வந்த பிள்ளையைப் பார்த்து ஸந்தோஷம் கொண்டவளாய் "குழந்தாய், என் அந்த்யகாலத்தில் க்ஷேமமாய்த் திரும்பி என் அருகில் வந்த உன்னை என கண்ணால் பார்க்கும்படி கிடைத்ததே. இதைக் காட்டிலும் அடையவேண்டியது வேறு என்ன இருக்கிறது? ஜீர்ணமான இந்த சரீரத்தைத் தாங்க சக்தியற்றவளாயிருக்கிறேன். என் உயிர் பிரிந்ததும் இந்த சரீரத்தை உன் கையாலேயே ஸம்ஸ்காரம் செய்து புண்யலோகம் கிடைக்கும்படி செய்யவேண்டும்" என்று சொன்னாள்.

இதைக்கேட்டு சங்கரர் தாயாருக்கு பரமாத்ம தத்வத்தை உபதேசித்தார். 'நிர்குணமான தத்வத்தில் என் மனது நிற்கவில்லை. ஸகுணமான ஈச்வர ஸ்வரூபத்தை பார்க்கவேண்டும்' என்று தாயார் கேட்க சங்கரர் பக்தியுடன் புஜங்கவிருத்தத்தில் பரமேச்வரனை ஸ்தோத்ரம் செய்தார். அதனால் பிரஸன்னரான ஈச்வரன் தன் தூதர்களை அனுப்பினார். சூலம் முதலிய ஆயுதங்களைக் கையிலேந்தியுள்ள அவர்களைப் பார்த்து பயந்து இவர்களுடன் கூட நான் போகவில்லை என்று சொன்னாள். பிறகு அவர்களை அனுப்பிவிட்டு அழகிய மஹா விஷ்ணுவின் ஸ்வரூபத்தை தாயாருக்கு வர்ணித்தார். அவளும் அந்த ஸ்வரூபத்தை மனதில் தரித்து தியானித்துக்கொண்டே சரீரத்தைவிட்டுப் பிரிந்ததும் விஷ்ணு தூதர்கள் வந்து மிக்க ஆதரவுடன் விமானத்தில் ஏற்றி வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றனர்.

பிறகு தனது தாயாரின் மனோரதத்தை நிறைவேற்ற தானே ஸம்ஸ்காரம் செய்ய உத்தேசித்து பந்துக்களிடம் அக்னியை கேட்டார். அவர்கள் எல்லாவற்றையும் துறந்த ஸந்யாஸிக்கு ஸம்ஸ்காரம் செய்ய அதிகாரம் ஏது என்று பலவிதமாக நிந்தித்ததுடன் அக்னி கொடுக்க வில்லை. அதனால் கோபங்கொண்டு ஆசார்யர் வலது கையைக் கடைந்து அதிலிருந்து உண்டான அக்னியால் ஸம்ஸ்காரம் செய்தார். "வேதபாஹ்யர்களாகவும், யதிகள் பிக்ஷை செய்வதற்கு யோக்யதை இல்லாதவர்களாயும், வீட்டின் பக்கத்திலேயே சவத்தைக் கொளுத்தும்படியாக வும் ஆகவேணுமென்று பந்துக்களை சபித்துவிட்டுச் சென்றார். அது இப்பொழுதும் காணப்படுகிறது.

இவ்விதம் தன் தாயாரை மறுபடியும் திரும்பிவாராத உயர்ந்த ஸ்தானத்தை அடையும்படி செய்து திக்விஜயம் செய்ய புறப்படுவதற்கு ஸனந்தனர் முதலான சிஷ்யர்களை எதிர்பார்த்துக்கொண்டு கேரள தேசத்திலேயே கொஞ்ச காலம் ஸஞ்சாரம் செய்துவந்தார். பத்மபாதர் வட தேசத்திலுள்ள தீர்த்தங்களை ஸேவித்துவிட்டு க்ரமமாக காளஹஸ்தி, காஞ்சி, சிதம்பரம் முதலிய க்ஷேத்திரங்களை தர்சித்துவிட்டு சோள தேசத்தை அடைந்து காவேரியில் ஸ்நானம் செய்துகொண்டு ஸ்ரீ ரங்கநாதரை ஸேவித்து பூர்வாச்ரமத்திய தன் மாமாவால் மிகவும் வேண்டிக் கொள்ளப்பட்டவராய் அவருடைய வீட்டிற்கு சென்றார். இவருடைய வரவை அறிந்து வெகுகாலம் கழித்து வந்த இவரைப் பார்க்க ஆவல்கொண்டு பந்துஜனங்கள் இவர் ஸமீபம் வந்து பார்த்து ஆனந்தக்கண்ணீர் பெருகிய

வர்களாய் பலவிதமாக பேசிக்கொண்டு இவருடைய பாண்டித்யத்தையும் வைராக்யத்தையும் புகழ்ந்து கொண்டாடினார்கள். பத்மபாதரும் கிருஹஸ்தாச்ரமத்தின் பெருமையை எடுத்துக் கூறி ஸ்வதர்மநிஷ்டர்களான அவர்களை ஸிலாகித்தார்.

பிறகு மாமாவின் கிருஹத்தில் பிக்ஷையை முடித்துக் கொண்டு பேசிக்கொண்டிருக்கும் பொழுது சிஷ்யனுடைய கையிலிருக்கும் ஏட்டுச் சுவடியைப் பார்த்து "இது என்ன" என்று கேட்க பத்மபாதர் மாதுலரிடம் பாஷ்யத்தையும் தான் செய்திருக்கும் டீகையையும் காண்பித்தார். அவர் முழுவதும் பார்த்து அவருடைய புத்தித் திறமையையும், தனக்கு இஷ்டமான குருமதம் அதில் கண்டிக்கப்பட்டிருப்பதையும் கவனித்து மனதில் அஸூயை கொண்ட போதிலும் அதை வெளியில் காட்டாமல் கிரந்தத்தை ஸிலாகித்தார். இந்த கிரந்தம் லோகத்தில் ப்ரசாரமடையாமல் மறைந்து போவதற்கு உபாயத்தையும் மனதில் ஆலோசித்தார். மாதுலருடைய இந்த எண்ணத்தை அறிந்து கொள்ளாமல் "இந்த கிரந்தம் தங்களிடமே இருக்கட்டும். நான் ஸேது யாத்திரையை முடித்துக்கொண்டு திரும்பி வந்து வாங்கிக்கொள்கிறேன்" என்று கூறிவிட்டு அச்சமயம் இடது கண் துடித்தல் முதலான துர்நிமித்தங்கள் ஏற்பட்டதையும் கவனியாமல் அங்கிருந்து புறப்பட்டார்.

போகும் வழியில் பத்மபாதர் ஆங்காங்கு புண்ய தீர்த்தங்களில் ஸ்நானம் செய்துகொண்டு திவ்ய க்ஷேத்ரங்

களை தர்சித்துக்கொண்டு தர்ப்பசயனம் சென்று பிறகு ஸேதுவை அடைந்தார். அங்கே ஸ்நானம் செய்து பக்தியுடன் ஸ்ரீ ராமநாதரை வணங்கி ஜனங்களுக்கு பக்தியும் சிரத்தையும் உண்டாவதற்காக ஸேதுவின் மாஹாத்ம்யத்தை உபதேசித்தார். ராமேச்வரபதத்தின் பொருளைப் பின் வருமாறு விவரித்துக் கூறினார். "ஸ்ரீராமர் रामस्य ईश्वरः रामेश्वरः (ராமருக்கு ஈச்வரர்) என்று தத்புருஷ ஸமாஸத்தைக் கூறுகிறார். रामः ईश्वरः यस्य सः रामेश्वरः (ராமனை ஈச்வரனாக உடையவர். அதாவது பரமசிவனுக்கும் ஈச்வரர் ராமர்) என்று பஹுவ்ரீஹி ஸமாஸத்தையும், இந்த்ராதி தேவர்கள் रामश्चासौ ईश्वरश्च (ராமராயிருக்கிற ஈச்வரன்) என்று த்வந்த்வ ஸமாஸத்தையும் கூறுகின்றனர். எல்லோருக்கும் தத்வம் ஒன்று என்பதில் தான் தாத்பர்யம்." இவ்விதம் உபதேசம் செய்துகொண்டு எல்லோராலும் பூஜிக்கப்படுகிறவராய் கொஞ்ச காலம் அங்கே வாஸம் செய்து விட்டு பிறகு அங்கிருந்து கிளம்பி அநேகம் ஸ்தலங்களைப் பார்த்துக்கொண்டு மறுபடியும் மாமாவின் கிருஹத்திற்கு வந்தார்.

அவரோவெனில் இவர் புறப்பட்டுச் சென்றவுடனேயே தன் ஸித்தாந்தத்தைக் கண்டிக்கின்ற இந்த கிரந்தத்திற்கு யுக்தியால் பதில் கூற சக்தியில்லாதவராய் கெட்ட எண்ணம் கொண்டு கிரந்தத்தைக் கொளுத்தி விடுவது என்று தீர்மானித்து அது வெளியில் தெரியாமலிருப்பதற்காக கிரந்தத்துடன் தன்வீட்டுக்கே நெருப்பை வைத்து விட்டு அந்த கிரந்தம் அழிந்து விட்டதைப் பார்த்து ஸந்தோஷமடைந்தார். மறுபடியும் திரும்பி

வந்த பத்மபாதரிடம் யதிருச்சையாக வீட்டில் நெருப்பு பற்றி அதனால் வீடு முழுவதும் எரிந்து போய் கிரந்தமும் போய் விட்டது என்று வருத்தத்தை வெளியில் காண்பித்துக்கொண்டு சொன்னார். இந்த வார்த்தையைக் கேட்டு மாதுலரின் கபடத்தை அறியாதவராய் உண்மை என்று நம்பி தன் கிரந்தம் அழிந்து விட்டதால் ஸர்வஸ்வத்தையும் இழந்தவர் போல் துக்கமடைந்தார். மாமரவோ வெனில் மறுபடியும் இந்த போல கிரந்தம் செய்து விடுவரோ என்று பயந்து பிக்ஷான்னத்துடன் புத்திக்கு மாந்த்யத்தை உண்டு பண்ணுகிற மருந்தைச் சேர்த்து சாப்பிடச் செய்தார். அதனால் மதியிழந்து ஒன்றும் தோன்றாமல் பத்மபாதர் அங்கிருந்து கிளம்பி மற்ற சிஷ்யர்களுடன் சேர்ந்து கொண்டு குருவின் ஸமீபம் செல்ல விரும்பி அவர் ஸஞ்சரிக்குமிடத்தை பிராமணர் மூலம் அறிந்து அங்கு சென்றார்.

குருவர்யரும் மாதாவுக்கு ஸம்ஸ்காரம் செய்து விட்டு கேரள தேசத்தில் ஸஞ்சாரம் செய்துகொண்டு மஹாலாலயேசரை பக்தியுடன் நமஸ்கரித்து பலவிதமாக அவருடைய மஹிமையை ஸ்தோத்ரம் செய்துகொண்டு அங்கு வஸித்து வந்தார். அந்த ஸமயம் சிஷ்யர்கள் எல்லோரும் குருவைத் தேடி அங்கு வந்து வெகுகாலம் பிரிந்து மறுபடியும் குருவின் தர்சனம் கிடைத்ததால் ஆனந்தமடைந்தவர்களாய் வந்தனம் செய்தார்கள். தயாநிதியான குருவும் வாடின மனதுடன் வந்த சிஷ்யர்களை குசலப்ரச்னம் விசாரித்து ஸமாதானப்படுத்தினார். பத்மபாதர் தான் யாத்ரை செய்த வரலாரைக் கூறி தான் எழுதின பாஷ்ய டீகை

றந்து போன தகவலையும் சொல்லி, அது லோகத்தில் ப்ரசாரமடையும்படி அனுக்ரஹிக்க வேண்டுமென்று பிரார்த்தித்தார். இதைக் கேட்டு குரு "உனது மடையில் முதல் ஐந்து பாதங்கள் மட்டும் என்னிடம் உன்னால் வாசித்துக்காட்டப்பட்டது. அதை ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறேன். அதைச் சொல்கிறேன். எழுதிக் கொள்" என்று அதே ஆனுபூர்வியாகச் சொன்னார். பத்ம பாதர் குரு சொன்னதை எழுதிப்பார்த்து ஆனந்தமடைந் தார். இவ்விதமே மறைந்து போன கேரள ராஜனுடைய மூன்று நாடகங்களையும் தன்னிடம் முன்னால் வாசித்துக் காட்டியதை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு மறுபடியும் அவனுக்குக் கூறி அனுக்ரஹித்தார்.

## 15-வது ஸர்க்க ஸங்கிரஹம்

பிறகு குருஸார்வபௌமர் ஆயிரக்கணக்கான சிஷ்யர் களால் சூழப்பட்டவராய் ஸுதன்வராஜனால் பின்தொட ரப்பட்டு திக்விஜயத்திற்காகப் புறப்பட்டார். முதலில் ஸேதுவிற்குச் சென்று அங்குள்ள வைதிக மார்க்கத்தி லிருந்து நழுவியவர்களை வேதமார்க்கத்தைக் கைக்கொள் ளும்படி செய்து ஸ்ரீராமநாதரைப் பூஜித்துக்கொண்டு கொஞ்சகாலம் வஸித்தார். பிறகு சோள தேசத்திலும் பாண்டிய தேசத்திலும் ஸஞ்சாரம் செய்து பிற மதத்தி னரை ஜயித்து காஞ்சிநகரம் சென்றார். அங்கு ஸ்ரீகாமாக்ஷி தேவிக்கு ஆச்சரியப்படத் தகுந்த பெரிய ஆலயம் கட்டி பூஜையில் வைதிக ஸம்ப்ரதாயத்தை ஏற் படுத்தி அங்கே தன்னிடம் வந்த அநேகம் சிஷ்யர்களை

அனுக்ரஹித்து திருப்பதி சென்று வெங்கடாசலபதியை பூஜித்து விதர்ப்ப தேசம் சென்றார். அங்கே அரசனால் பூஜிக்கப்பட்டு அங்குள்ள ப்ராஹ்மத்வேஷிகளும் மிக பயங்கரமான வேஷம் கொண்டவர்களுமான பைரவோபாஸகர்களை ஜயித்து மேற்கு ஸமுத்திரக் கரையில் அநேக இடங்களில் ஸஞ்சாரம் செய்து கொண்டு கோகர்ண க்ஷேத்ரம் சென்று பரமேச்வரனை ஸ்தோத்ரம் செய்து பூஜித்து சிஷ்யர்களுக்கு பாடப்ரவசனம் செய்து கொண்டு கொஞ்ச காலம் வஸித்து வந்தார்.

அப்பொழுது ஸ்ரீஹாரதத்தாசார்யர் முகமாக ஆசார்யாளின் சிறப்பைக் கேட்டுப் பொறுக்காமல் வாதத்திற்காக வந்த ஸ்ரீகண்டாசார்யரை ச்ருதி யுக்தி ப்ரமாணங்களால் ஜயித்து சரணாகதி யடைந்த அவரால் பூஜிக்கப்பட்டவராய் ஸௌராஷ்டிர தேசத்தில் தன் பாஷ்யங்களை பிரசாரமடையும்படி செய்து த்வாரகை சென்று வைஷ்ணவர், சைவர், சாக்தர் முதலானவர்களை தன் ஸித்தாந்தத்தை அனுஸரிக்கும்படி செய்து உஜ்ஜயினி சென்றார். அங்கே பகவானை ஆராதித்து மிகக் கீர்த்தி பெற்ற வாதி பயங்கரரான பட்டபாஸ்கரர் என்ற பண்டிதரையும் வாதத்தில் ஜெயித்தார். பிறகு அவந்தி தேசத்தில் ஸஞ்சாரம் செய்து ப்ரஸித்தர்களான பாணர், மயூரர் முதலியவர்களை தன் பாஷ்யத்தை ச்ரவணம் செய்வதில் ஆவலுள்ளவர்களாகச் செய்து ஜைன பௌத்தர்களை ஜயித்து நைமிசம் சென்று குரு, பாஞ்சாலம், சூரசேனம் முதலிய தேசங்களிலும் ஜயத்தை யடைந்து சாக்தரான அபிநவ குப்தரையும் ஜயித்து விதேஹம், கோஸலம்,

அங்கம், வங்கம் முதலிய தேசங்களிலும் ஸஞ்சரித்து முராரிமிச்ரர், உதயனர், தர்மகுப்தமிச்ரர் முதலியவர்களை ஜயித்து கௌட தேசத்திலும தன் கீர்த்தியை பரவச் செய்தார்.

## 16-வது ஸர்க்க ஸங்கிரஹம்

இவ்விதம் எல்லா வாதிகளையும் ஜயித்து அவர்களால் கொண்டாடப்பட்டு சிறப்புடன் விளங்குகின்ற ஆசார்யாளின் கீர்த்தியைக்கண்டு ஸஹிக்காமல் அஸூயையை கொண்ட அபிநவகுப்தர் ஆபிசாரப்ரயோகத்தால் குருவின் சரீரத்தில் பகந்தர ரோகத்தை உண்டுபண்ணினர். அதனல் எப்பொழுதும ரக்தப்பெருக்கு ஏற்பட்டு வஸ்திரம் நனைந்து துர்கந்தம் ஏற்பட்ட போதிலும் கொஞ்சமேனும் வெறுப்புக் கொள்ளாமல் எப்பொழுதும் பக்கத்திலேயே இருந்து தோடகர் பணிவிடைகளைச் செய்து வந்தார். குருவும கொஞ்சமேனும சரீரத்தில் அபிமானம் கொள்ளாமல் ரோகத்தின பீடையை பொருட்படுத்தாதவராய் முன்போல் தன் ஆஹ்நிகங்களைச் செய்து வந்தார். ரோகத்தை நிவிருத்தி செய்து கொள்ளவதில கொஞ்சமும் முயற்சி எடுத்துக்கொள்ளவில்லை. சிஷ்யர்கள் குருவின் சரீரத்தில் ஏற்பட்ட ரோகத்தைப் பார்த்து மனது பொறுக்காதவர்களாய் மிகவும பிரார்த்தித்து குருவிடமிருந்து சிகித்ஸை செய்வதற்கு அனுமதியைப் பெற்று ஆங்காங்கு சென்று அரண்மனை வைத்யர்களை வரவழைத்துக் காட்டினர்கள். அவர்கள் வைத்யம் செய்வதில் நிபுணர்களாயிருந்த போதிலும் பலவித முயற்சிகள்

செய்தும் ரோகம் நீங்காததால் திரும்பிச் சென்றார்கள். ஆசார்யர் ஆதிவைத்யரான பரமேச்வரனையே ஸதா ஸ்மரித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது பரமேசனால் அனுப்பப்பட்டு அச்விநீ தேவர்கள் குருவின் ஸமீபம் வந்து, "இந்த ரோகம் ஆபிசாரப்ரயோகத்தால் ஏற்பட்டது. சிகித்ஸை செய்து நிவ்ருத்தியாக்க முடியாது" என்று கூறிவிட்டுச் சென்றனர். இதைக் கேட்டு பத்மபாதர் ஞானதிருஷ்டியால் ஆபிசாரப்ரயோகம் செய்தவனைத் தெரிந்துகொண்டு மந்த்ர ஜபத்தாலும் இஷ்டதைவமான நரஸிம்ஹ த்யானத்தாலும் குருவின் சரீரத்திலிருந்து ரோகத்தை விலக்கி அதை ஏவிவிட்ட அபிநவகுப்தரிடமே செல்லும்படி செய்தார். அவரும் மஹான்களுக்கு அபசாரம் செய்ததன் பலனை அடைந்தார்.

இவ்விதம் ரோகம் நிவ்ருத்தியான பிறகு ஆசார்யர் ஒருநாள் ஸாயங்காலம் கங்கைக் கரையில் ப்ரஹ்மத்யானம் செய்து கொண்டிருக்கும் பொழுது அங்கு வந்த பரமகுருவான ஸ்ரீகௌடபாதாசார்யரைப் பார்த்து பரபரப்புடன் எழுந்திருந்து வினயத்துடன் அருகில் சென்று பாதத்தில் வணங்கி முறைப்படி பூஜித்து அஞ்ஜலி பந்தம் செய்து கொண்டு பக்கத்தில் நின்றார். அவரும் வித்யாப்ரசாரம் ஆத்மானுஸந்தானம் முதலியவைகளைப் பற்றிக் கேட்டுவிட்டு "கோவிந்தர் முகமாக நீ பாஷ்யங்கள் இயற்றியிருப்பதைக் கேள்விப்பட்டு மிகுந்த சந்தோஷத்துடன் உன்னைப் பார்ப்பதற்கு வந்தேன்" என்று கூறினார். உடனே ஆசார்யன் தான் இயற்றியுள்ள பாஷ்யங்கள் எல்லாவற்றையும் காண்பித்து மாண்டூக்யகாரிகா பாஷ்யத்

தையும் காண்பித்தார். "என் மனதிலுள்ள அபிப்ராயங்கள் முழுவதும் இந்த பாஷ்யத்தில் நன்கு காண்பிக்கப்பட்டிருக்கிறது. இதனால் மிகவும் ஸந்தோஷமடைந்தேன். வேண்டிய வரத்தைக் கேள் கொடுக்கிறேன்" என்று குரு சொன்னதைக் கேட்டு ஆசார்யாள் "ஸ்ரீ சுகாசார்யருடைய அம்சமான தங்களுடைய தர்சனம் பிறருக்குக் கிடைக்காதது எனக்குக் கிடைத்து விட்டது. இதைத் தவிர வேண்டியது வேறு என்ன இருக்கிறது. இதனாலேயே க்ருதார்த்தனாய் விட்டேன். ஆனாலும் எப்பொழுதும் என் மனம் ஆத்மசிந்தனத்திலேயே ஈடுபட்டிருக்கும்படியாக அனுக்ரஹம் செய்யவேண்டும்" என்று விநயத்துடன் ப்ரார்த்தித்தார். ஸ்ரீகௌடபாதாசார்யரும் அப்படியே அனுக்ரஹித்து விட்டு ஸ்வஸ்தானம் சென்றார்.

॥ षष्ठः श्लोकः ॥

तोटकार्चितपादमर्दितपद्मगर्वसुजाह्नवी-
दर्शिताब्जपदागमोद्धृतभेदबुद्धिविनेयराट् ।
मातृसद्गतिसादरः कृतशापदायजनः श्रमात्
तीर्थयात्रसरोजपादसुकेरलेन्द्रमनःक्रमम् ॥ ६ ॥

॥ व्याख्या ॥

तोटकेति । तोटकेन तोटकाचार्येण अर्चितौ पादौ यस्य सः । अत्र अर्चनपदं शौचमृत्कुम्भदन्तकाष्ठानयनशाटीक्षालनपादसंमर्दनादिबहुप्रकारशुश्रूषापरम् । तथा अर्चितपाद इत्यर्थः ।

तथाविधशुश्रूषाफलतया तत्परवशगुर्वनुग्रहेण तोटकवृत्तश्लोकैः परमात्मतत्वप्रकाशनसामर्थ्यं बभूवेत्याह— तोटकपदं तद्वृत्त-लक्षणपरम् । तदर्चिताः तद्युक्ताः पादाः चतुर्थांशाः येषां श्लोकानां तैः श्रवणद्वारा तच्छ्रवणेनेत्यर्थः । मर्दितः पद्मगर्वः पद्मपादगर्वः येन सः । नामैकदेशग्रहणम् । तोटकार्चित-पादश्चासौ मर्दितपद्मगर्वश्च । सुष्ठु यथा तथा जाह्नव्या दर्शितेषु अब्जेषु पदानि पादविन्यासाः यस्य तस्य पद्मपादस्य, अर्थाल्लभ्यते । आगमेन परतीरात् गुरुसमीपागमनेन उद्धृता निवर्तिता भेदबुद्धिः अन्यथाग्रहणं असूयेति यावत् । येषां इतरविनेयानां तैः शिष्यैः राजन इति राट्; तान् राजयति प्रकाशयति शुद्धहृदयान् करोतीत्यर्थः ॥

अपरा योजना—जाह्नव्यां तत्तीरे दर्शिनः निर्माय प्रकाशितः अब्जः भाष्यचन्द्रः, तत्र प्रदर्शितेन, पदाय त्राणाय अद्वैतमत-रक्षणाय; तादर्थ्ये चतुर्थी 'पदं व्यवसितत्राण' इति कोशात् । आगमेन श्रुत्या, तदनुसारियुक्तिशतेन च उद्धृता निरस्ता भेद-बुद्धयः भेदवादिनः येन । यद्वा यस्य स चासौ । अत एव वादिनः सर्वेपि विनेयाः विधेयाः वशंवदाः तैः राजते सर्वोत्कर्षेण प्रकाशते इति विनेयराट् च इत्यर्थः ॥

श्रीगुरुः मातुरन्त्यकालं विज्ञाय तत्समीपं गतवानित्याह—मातुः सद्गतिः, उत्तमस्थानप्रापणम्, तत्र सादरः तदर्थमुद्युक्त

इत्यर्थः । तदुक्तसस्थानप्रापणानन्तरं स्वेनाङ्गीकृतसंस्कारादिविषये न केवलं नोपकृतः, अपि तु तिरस्कृतश्च ज्ञातिभिः, तत्संजात-कोपेन तत्कृतश्रमान् कृतः कारितः शापः यैः दायजनैः, तथाविधा दायजना यस्य सः । पूर्वं श्रीगुरोः शृङ्गगिरिग्रामसमये तीर्थ-यात्रायै गुरोरनुमतिं प्राप्य प्रस्थितः पद्मपादः पश्चात् यात्रायां श्रममनुभूय केरळप्रान्तसंचारवेलायां गुरुसमीपमागत इत्याह— पूर्वं श्रमान् श्रमेण निर्बन्धेन तीर्थान् गुरोः सकाशात् यात्रा तदनुमतिः यस्य स चासौ सरोजपाच्च तीर्थयात्रसरोजपात् । प्रस्थित इति शेषः । पश्चात् श्रमं अतीति श्रमान् तीर्थं सद्गुरुं प्रति यात्रा गमनं प्रस्थानमिति यावत् । स चासौ सरोजपाच्च । स च असुभृतः प्राणभृतः केरळेन्द्रश्च । श्रीगुरोः तद्भक्त्यतिशयेन तस्मिन्नतीव प्रेम; अत उक्तं असुभृत इति । तयोः मनाङ्मं ग्रन्थवियोगादिप्रयुक्तमनोव्यथां अपास्तवान् इति शेषः ॥

॥ सप्तमः श्लोकः ॥

सारगीर्निरपास्त दीक्षितशिष्यकोटिकृतिक्रमः
सेतुकाञ्चिपुरादिसेवनशाक्तखण्डनदक्षधीः ।
अश्विबोधितपद्मधिक्कृतदुष्प्रयोगनिपीडनो
मोदमाननताङ्घ्रिदेशिकगौडपादनुमोदितः ॥ ७ ॥

॥ व्याख्या ॥

कथमपास्तवानिति चेत्, आह— सारेति । पूर्वं

स्वसमीपे पद्मपादाचार्येण पञ्चपादिका, केरळेन्द्रेण नाटकत्रयं च पठितम् । 'तदिदानीं स्मर्यते, लिख्यतां' इत्युक्तं गुरुणा । तथा लेखयित्वा अपास्तवानित्याह— साराश्च ताः गिरश्च ताभिः पञ्चपादिकारूपाभिः नाटकत्रयरूपाभिश्च उक्तिभिः । ग्रन्थप्रापणेन मनोव्यथां अपास्य शिष्यकोटीनां कृतयः अद्वैतपरग्रन्थाः बृहदारण्यकवार्तिकादयः गुरुदक्षिणात्वेन विरचय्यार्पिताः, तेषां क्रमाः पद्धतयः वीक्षिता अवेक्षिता येन सः । दिग्विजयार्थं शिष्यागमनं प्रतीक्ष्य स्थित इत्याह— वीक्षिताः प्रतीक्षिताः शिष्याः येन सः वीक्षितशिष्यकः । सुधन्वराजसहितशिष्यागमनानन्तरं प्रस्थित इत्याह— अटिकृतिक्रम इति भिन्नं पदम् । अटिना अटनेन दिक्षु संचारेण कृतिक्रमः वादिविजयरूपकर्तव्यक्रमः यस्य सः । अपरा योजना —शिष्यकोटिषु मध्ये ये कृतिनः समर्थाः सुरेश्वरपद्मपादहस्तामलकतोटकाचार्याः तेषां क्रमः अद्वैतमतसंरक्षणसंप्रदायार्थं स्थापनक्रमः । वीक्षितः आलोचितः तत्क्रमः येन सः । तथा आलोच्य स्थापितवान् इत्यर्थः ॥

अन्याऽपि योजना — गिरां सारभूता वेदशास्त्रपुराणादिरूपवाचां परमतात्पर्यविषयभूतेत्यर्थः । सारा च सा गीश्च सारगीः । अरपदेन सुधासमुद्र उच्यते । 'अरश्च ह वै ण्यश्च अर्णवौ' इत्युक्तेः । तेन सह वर्तत इति सारा गीः वाण्यादिनानाशक्तिरूपेण वर्तमाना । स्वतत्तु चिदाकाशरूपेत्याह —

भानि नक्षत्राणि अस्मिन् सन्तीति भी आकाश इत्यर्थः । 'नक्षत्र-मृक्षं भं तारा,' 'तारापथोऽन्तरिक्षं च' इति चामरः । प्रकृतानुरोधात् सामान्यपदस्य विशेषपरत्वात् अत्र चिदाकाशपरत्वम् । चिदाकाशरूपेत्यर्थः । तद्वीक्षणेन ब्रह्मणः आस्ये सरस्वती प्रविष्टा, विष्णोरुरसि लक्ष्मीः प्रविष्टा इत्याह — रपेति । 'लप व्यक्तायां वाचि' इत्यनुशासनात् रलयोरभेदाश्रयणेन रपः वाक् तेन च सरस्वती लक्ष्यते । सा ब्रह्मणः आस्ये येन वीक्षितेन तथाभूतं वीक्षितं वीक्षणं यस्य सः । मारगीश्चासौ भी च, स चासौ रपास्यवीक्षितश्च । शिष्यश्चासौ कोटिश्च । शास्तीति शिष्यः । ब्रह्मणः बहुविधं अनुशासनं कृतवतीत्यर्थः । कोटिः कामकोटिः, नामैकदेशग्रहणम् । तत्पीठनिवासिनी कामाक्षी इत्यर्थः । तस्य कृतिक्रमः आलयनिर्माणपूजाप्रवर्तनादिरूपकर्तव्यक्रमः यस्य सः ॥

सेतुकाञ्चीति । सेतुश्च काञ्चीपुरं च आदिनी येषां देशानां सेवनं प्राप्तिः, तत्रत्यदेवतानां स्तुतिनत्यादिभिः आराधनं च यस्य स चासौ शाक्तखण्डनदक्षधीश्च । शक्ताः स्वमतस्थापन-परमतनिराकरणसमर्था ये श्रीकण्ठाचार्यप्रभृतयः । शक्ता एव शाक्ताः, स्वार्थे प्रत्ययः । शाक्तमतावलम्बिनश्च अभिनवगुप्तादयः तेषां खण्डने दक्षा धीः यस्य सः ॥

अपरा योजना — सेतुः वर्णाश्रमादिधर्मव्यवस्थापकः 'एष सेतुर्विधरणः' इत्युक्तेः । काञ्चि तत्पुरस्थः एकाम्रेश्वररूपश्च,

पुरादी पुरभञ्जकः त्रिपुरहिंसकः त्रिपुरारिरित्यर्थः । तस्य मेवं स्वापराधक्षमापणार्थं स्तुतिनत्यादिभिः अर्चनं यस्य स चासौ । अपराधमेव प्रकटयति—शाक्तखण्डनश्च; शक्तेः सतीरूपायाः इदं शाक्तम् । तत्संबन्धि खण्डनम्, अवमाननरूपतिरस्करणं यस्य स चासौ दक्षश्च, दक्षप्रजापतिरित्यर्थः । धीः अन्तर्यामिरूपेण बुद्धिस्थ इत्यर्थः । दक्षसहिता धीरिति समासः । यः परमेश्वरः एवमादिमाहात्म्यविशिष्टः स खलु गुरुरूपेणावतीर्णः; किमु वक्तव्यं तन्माहात्म्यम् ? तादृशस्य विचित्रभाष्यरचनं वा, वादिनिराकरणं वा कियत् ईषत्करमित्यर्थः । इत्येवमादि ध्वन्यते ॥

अभिनवगुप्तकृताभिचारेण भगंदररोगप्राप्तिः, श्रीपद्मपादाचार्येण तन्निवृत्तिश्च इत्याह— अश्वीति । अश्विभ्यां आश्विनीदेवताभ्यां बोधितः, अयं न रोगः, किन्तु आभिचारकृतः इत्येवं बोधितश्चासौ पद्मश्च पद्मपादश्चेत्यर्थः । नामैकदेशग्रहणम् । तेन धिक्कृतः प्रयोक्तुरेव प्रेरितः, स चासौ दुष्प्रयोगश्च आभिचारः तत्प्रयुक्तं निपीडनं यस्य सः । श्रीभगवत्पादानां देहाभिमानाभावेन श्रमाभावेऽपि द्रष्टॄणां शिष्याणां तदसहनात् । रोगनिवृत्त्यनन्तरं श्रीगौडपादाचार्यदर्शनसंभाषणादिकं संजातमित्याह— मोदमानेति । गङ्गातीरे मोदमानः तथात्वेन वर्तमानः तद्दशायां श्रीगौडपादाचार्यागमदर्शनेनाभ्युद्गम्य नतौ अंघ्री यस्य स चासौ देशिकश्च परमाचार्यश्च तादृशगौडपदा गौडपादाचार्येणानुमोदितः

श्लाघित: विनयादिगुणगणदर्शनेन स्वाभिमतार्थाविष्करणदर्शनेन अनुमोदितमाण्डूक्यकारिकाभाष्यंश्च इत्यर्थः ॥

(ஸ்ரீ சங்கரர்) தோடகரால், சௌசத்திற்கு மிருத்து, ஜலம் கொண்டுவருவது, தந்தகாஷ்டம் எடுத்துவருதல், வஸ்திரசோதனம், கால்பிடிப்பது முதலான சுச்ரூஷைகளால் பாதஸேவை செய்யப்பட்டவராய் இந்த சுச்ரூஷையின் பலனாக தன் அனுக்ரஹத்தால் அவரிடம் ஆவிர்பவித்த தோடக விருத்தத்தில் அமைந்த சுலோகங்களால் பத்மபாதரின் கர்வத்தை நீக்கி, கங்காதேவியால் காண்பிக்கப்பட்ட தாமரைகளில் காலை வைத்துக்கொண்டு நடந்து கங்கையின் அக்கரையிலிருந்து இக்கரைக்கு வந்துசேர்ந்த பத்மபாதரால் அஸூயையை நீங்கி சுத்த ஹ்ருதயர்களான சிஷ்யர்களுடன் விளங்கினார். கங்கா தீரத்தில் பாஷ்யமியற்றி அதில் காண்பிக்கப்பட்ட சுருதிகளாலும் யுக்திகளாலும் பேதவாதிகளை ஜயித்து எல்லோரையும தன் சிஷ்யர்களாக ஏற்றுக்கொண்டு விளங்கினார்.

ஆசார்யர் சிருங்ககிரியில் வாஸம் செய்யும்பொழுது நிர்பந்தமாக குருவின் அனுமதியைப் பெற்று பத்மபாதர் தீர்த்த யாத்திரைசென்றார். பிறகு ஆதரவுடன் சென்று மாதாவுக்கு ஸத்கதியைக் கொடுத்து தான் ஸம்ஸ்காரம் செய்வதை அவமதித்த ஞாதிகளுக்கு சாபம் கொடுத்து கேரள தேசத்தில் ஸஞ்சாரம் செய்யும்பொழுது தீர்த்த யாத்திரையில் பலவித துன்பத்தை யடைந்து தான் இயற்றிய கிரந்தத்தையும் இழந்து தன்னிடம் திரும்பிவந்த

பத்மபாதரையும், தன் நாடகங்களை இழந்த கேரள ராஜனையும் ஸமாதானம்செய்து, அவர்களால் இயற்றி முன் ஒருசமயம் தன்னிடம் வாசித்துக் காண்பிக்கப் பட்ட பஞ்சபாதிகையையும் மூன்று நாடகங்களையும் ஞாபகத்தில் வைத்து மறுபடியும் அவர்களை எழுதிக் கொள்ளச் செய்து அக்கிரந்தங்களை பிரகாசப்படுத்திய தின் மூலம் அவர்களுடைய மனக்கிலேசத்தை நீக்கி மற்றும் பல சிஷ்யர்களால் இயற்றி குருதக்ஷிணையாக ஸமர்ப்பிக்கப்பட்ட அநேகம் அத்வைத கிரந்தங்களைப் பார்த்து சிலாகித்தார்.

பிறகு திக்விஜயம் செய்ய புறப்படுவதற்காக சிஷ்யர்களின் வரவை எதிர்பார்த்து அவர்கள் வந்ததும் அவர்களுடனும் ஸுதன்வராஜனுடனும் புறப்பட்டு ஆங்காங்கு ஸஞ்சாரம் செய்து வாதிகளை ஜயித்து அத்வைத மதத்தையும் ஸம்பிரதாயத்தையும் காப்பாற்றுவதற்காக தன் சிஷ்யர்களில் முக்யர்களான சுரேச்வரர், பத்மபாதர், ஹஸ்தாமலகர், தோடகர் இந் நால்வர்களையும் ஸ்தாபித்து சிதாகாசரூபிணியாயும் ஸரஸ்வதி, லக்ஷ்மீ முதலிய ரூபங்கள் எடுத்துக்கொண்டு பிரஹ்மா, விஷ்ணு முதலியவர்களுடன் கூட இருந்து சக்தியைக் கொடுக்கின்றவளும் பிரஹ்மாவுக்கு பல உபதேசங்களைச் செய்தவளுமான காமகோடி பீடத்தில் வாஸம் செய்கின்ற ஸ்ரீ காமாக்ஷி தேவிக்கு விசித்திரமான ஆலயம்கட்டி விசேஷமாக பூஜைகள் நடந்துவரும்படி ஏற்பாடு செய்தார். பிறகு சேது முதலான இடங்கள் சென்று பூஜித்து ஸ்தோத்ரம் செய்து பிறமதங்களை கண்டிப்பதில் வல்லவர்களான ஸ்ரீ

கண்டராசார்யர் முதலியவர்களையும் அபிநவகுப்தர் முதலான சாக்தர்களையும் ஜயித்தார்.

அபிநவகுப்தருடைய ஆபிசாரப்ரயோகத்தால் ஏற்பட்ட பகந்தர ரோகத்தால் ஆசார்யருடைய சரீரம் துன்பப்படுவதைப் பார்த்து தேஹாபிமானமில்லாததால் அவர் பொறுத்துக்கொண்டபோதிலும் அதைப் பார்க்கின்ற தன் மனது பொறுக்காமல் பத்மபாதர் அச்வினி தேவதைகள் மூலம் உண்மையை அறிந்து தன் சக்தியால் ரோகத்தை அபிநவகுப்தரிடமே போகும்படி செய்தார். பிறகு ஸ்ரீ சங்கரர் கங்கா தீரத்தில் பரமகுருவான கௌட பாதரை தர்சனம் செய்து பாதத்தில் வணங்கி தான் இயற்றிய பாஷ்யங்களைக் காட்டி அவரால், தன் அபிப்ராயம் மாண்டூக்யகாரிகா பாஷ்யத்தில் நன்றாக காட்டியிருப்பதைப் பார்த்தும், இவருடைய வினயம் முதலான குணங்களைக் கண்டும் மிகவும் ச்லாகிக்கப்பட்டார்.

## ॥ अष्टमः श्लोकः ॥

॥ षोडशसर्गविशिष्टकथा ॥

एवं श्रीगौडपाददर्शनादिवृत्तान्तं शिष्यगणान् श्रावयन्, नीत्वा तां निशां परेद्युः उषसि स्नात्वा जपाद्यनुष्ठानवेलायां श्रुतवानिमं वृत्तान्तम् —

'जम्बूद्वीपं शस्यतेऽस्यां पृथिव्यां तत्राप्येतन्मण्डलं भारताख्यम् ।
काश्मीराख्यं मण्डलं तत्र शस्तं यत्राऽऽस्तेऽसौ शारदा वागधीशा ॥'

तत्र चतुर्द्वारमण्टपोपेतं श्रीशारदाक्षेत्रं चकास्ति। तत्र च सर्वज्ञपीठं विराजते। सर्वज्ञ एव तत्पीठमधिरोढुमर्हति, नान्ये। तत्पीठारूढानामेव सर्वज्ञता सज्जनसंमता भवति नान्येषाम्। तत्र प्राच्याः पश्चिमाः उदीच्याश्च पिहितं तत्तत् द्वारं उद्घाट्य पीठमारूढवन्तः। दक्षिणद्वारं परमनुद्घाटितं वर्तते' इति। एतत् श्रुत्वा तदानीमेव दाक्षिणात्यपण्डितेषु सर्वज्ञो नास्तीतीमामपकीर्ति-मपमार्ष्टुं श्रीशंकराचार्यः ततः प्रस्थाय काश्मीरदेशं गत्वा दक्षिण-द्वारमुद्घाटयितुं प्रववृते। नाविदितं किञ्चिन्ममास्ति, परीक्षणीयं चेत् परीक्ष्यतामिति चावदत्। तदैवागत्य वादिगणाः तत्तन्मत-रहस्यं पप्रच्छुः। वैशेषिकनैयायिकसांख्यबौद्धचतुष्टयदिगम्बरादिषु दत्तोत्तरेषु, जैमिनीयमतावलम्बिन्यपि दत्तोत्तरे सति सर्वेऽपि पण्डिताः श्लाघयन्तः पूजयन्तश्च द्वारमुद्घाट्य मार्गं ददुः॥

तदानीं श्रीपद्मपादस्य हस्तमवलम्ब्य विद्यापीठारोहणाय प्रवर्तमानमाचार्यं आकाशवाण्या शारदा एवमब्रवीत्—'नात्र सर्वज्ञतामात्रं पीठारोहणे हेतुः। अपि तु शुचित्वमपि। तत्र नास्ति सर्वविक्त्वे सन्देहः। अस्ति तु शुचित्वे, यतो राजदारानु-पभुक्तवान्। अतो विचार्यारोढव्यम्' इति। तच्छ्रुत्वा 'मातः, मास्तु तव संदेहः जन्मप्रभृति किंचिदपि किल्बिषमकुर्वाणस्य मम एतद्देहशुचित्वविषये। उपभोगादिकं तु देहान्तराश्रयणेन। न च तेन कर्मणा अयं देहः संबध्यते, अकृताभ्यागमादिदोष-प्रसङ्गात्। न चान्यकर्मणाऽन्यः संबध्यते इति हि शास्त्रसिद्धान्तः।

लोकप्रसिद्धिश्च तथैव ।' इति आचार्यः अब्रवीत् । एवं शारदाम्बया अङ्गीकृतः परमाचार्यः सर्वज्ञपीठमारुरोह । एवं दुर्मतनिरसन-वैदिकाद्वैतमतस्थापनरूपावतारकृत्यं विधाय स्वसिद्धान्ते बहुमानताबुद्ध्युत्पादनाय सर्वज्ञपीठारोहणमपि कृतवान् ॥

एवं सर्वैरपि श्लाघितः परमाचार्यः शृङ्गिर्यादिस्थलेषु सुरेश्वरादिशिष्यान् स्थापयित्वा बदरिकाश्रमं संप्राप्य पातञ्जलान् स्वभाष्यमध्याप्य केदारक्षेत्रं जगाम । तत्रानिशीतार्दिताशिष्यगणहिताय संप्रार्थितपरमेश्वरानुग्रहात् उष्णनदीं प्रवाहयतिस्म । साऽद्यापि परमाचार्यकीर्तिं प्रथयन्ती विराजते ॥

आक्रान्तानि दिगन्तराणि यशसा साधीयसा भूयसा
विस्मेराणि दिगन्तराणि रचितान्यत्यद्भुतैः क्रीडितैः ।
भक्ताः स्वेप्सितभुक्तिमुक्तिकलनोपायैः कृतार्थीकृताः
भिक्षुक्ष्मापतिना किमन्यदधुना सौजन्यमातन्यताम् ॥

इत्युक्तदिशा देवमनुष्यकार्यं कृतवन्तं श्रीमदाचार्यं कैलासं नेतुं चतुर्मुखशतमखचन्द्रोपेन्द्रादिदेवगणाः सह महर्षिसंघैः मन्दारकुसुमनिकरैरर्चयन्तः 'भगवन्, भवान् त्रिनयनः त्रिपुरान्तकः विषमविषाशनः जगत्सृष्टिस्थितिलयहेतुः साक्षात्कैलासपतिरेव देवमनुष्यकार्यार्थं भूमाववतीर्णः । अवतारकृत्यं समाप्तमासीत् । तदागच्छतु भवान् स्वर्गादिलोकान्' इति प्रार्थयामासुः । तदङ्गीकृत्य कैलासजिगमिषासमकालमेव संप्राप्तं श्रीनन्दिकेश्वरं ब्रह्मरत्न-

हस्तावलम्बः सन् आरुह्य प्रकटितजटाकलापचन्द्रकलावतंसादिरूपः इन्द्रादिदेवैरर्च्यमानः महर्षिसंघैः स्तूयमानो नैजं धाम प्रतस्थे ॥

ईश्वरो रक्षतु ॥

இவ்விதம் கௌடபாதரை தர்சனம் செய்த விருத்தாந்தத்தை சிஷ்யர்களிடம் சொல்லிவிட்டு அன்று இரவைக் கழித்து மறுநாள் காலையில் ஸ்நானம் செய்து ஆஹ்நிகாநுஷ்டான ஸமயத்தில் இவ்வரலாறைக் கேள்விப்பட்டார். "இப்பூவுலகில் ஜம்பூத்வீபமும் அதில் பாரதகண்டமும் அதில் காச்மீர மண்டலமும் மிகப்புனிதம் வாய்ந்தது. அங்குதான் வாகீச்வரியான ஸ்ரீசாரதை வாஸம் செய்கிறாள். ஸ்ரீசாரதாலயத்தில் நான்கு வாசலுள்ள மண்டபமொன்று இருக்கிறது. அதில் ஸர்வக்ஞ பீடமொன்று விளங்குகிறது. ஸர்வக்ஞர் தான் அதில் ஏறி உட்கார்ந்து கொள்ள முடியும். அவரைத்தான் ஸர்வக்ஞர் என்று வித்வான்கள் ஒப்புக்கொள்வார்கள். அதில் கிழக்கு மேற்கு வடக்கு திக்குகளிலிருந்து சிறந்த அறிவாளிகள் வந்து அந்தந்த திக்குகளிலுள்ள வாசல்களைத் திறந்துகொண்டு மண்டபத்தினுட் புகுந்து ஸர்வக்ஞ பீடத்தில் ஏறி விட்டார்கள். தெற்கு திக்கிலிருந்து ஒருவரும் வாராததால் இதுவரை அந்த வாசல் திறக்கப்படாமலேயே இருக்கிறது. தென்பாகத்தில் வித்வான்களில்லைபோலும்"

இதைக்கேட்டு தெற்கு திக்கில் ஸர்வக்ஞரில்லை என்ற அபகீர்த்தியை நீக்குவதற்காக ஸ்ரீ ஆசார்யர் அப்பொழுதே அங்கிருந்து புறப்பட்டு காச்மீர தேசம் சென்று தெற்கு

வாசலைத்திறக்க ஆரம்பித்தார். கூடியிருந்த ஜனங்களிடம் நான் ஸர்வக்ஞன் என்பதில் ஸந்தேஹமிருந்தால் கேள்விகள் கேளுங்கள். பதில் கூறுகிறேன் என்று சொன்னார். அவர்களும் ஒவ்வொருவராக கேள்வி கேட்க ஆரம்பித்தனர். வைசேஷிகர், நையாயிகர், ஸாங்க்யர், நான்கு வித பௌத்தர்கள் ஜைனர், ஜைமினியர் முதலான எல்லோருடைய கேள்விகளுக்கும் பதில் கூறினதும் எல்லா பண்டிதர்களும் ஆசார்யரை சிலாகித்து பூஜித்து கதவைத் திறந்து உள்ளே செல்ல வழிவிட்டனர்.

அப்பொழுது ஸ்ரீ பத்மபாதருடைய ஹஸ்தத்தைப் பிடித்துக்கொண்டு ஸர்வக்ஞ பீடத்தில் ஏறச்சென்ற ஆசார்யரைத் தடுத்து ஆகாசவாணியின் மூலம் ஸ்ரீ சாரதை இவ்வாறு சொன்னாள் —"இதில் ஏறுவதற்கு ஸர்வக்ஞனாக இருந்தால் மட்டும் போதாது. பரிசுத்தனாகவுமிருக்கவேண்டும். நீ ஸர்வக்ஞன் என்பதில் ஸந்தேஹமில்லை. ஆனால் நீ ராஜபத்னிகளை அநுபவித்திருப்பதால் உன்னை பரிசுத்தன் என்று சொல்வதற்கில்லை. ஆதலால் விசாரித்துத் தீர்மானம் செய்துதான் நீ ஏற வேண்டும்." இதைக்கேட்டு ஆசார்யர் "அம்மா, இது விஷயமாகக் கொஞ்சமேனும் ஸந்தேஹம் வேண்டாம். பிறந்தது முதல் ஒருவித பாபத்தையும் செய்யாத என்னுடைய இந்த தேஹம் பரிசுத்தமானது. ராஜபத்னி போகம் இந்த தேஹத்திலல்ல. வேறு தேஹத்தில் தான். ஒரு தேஹத்தில் செய்த கர்ம மற்றொரு தேஹத்தில் ஸம்பந்தப் படாது என்பதுதான் சாஸ்திரங்களில் கண்ட தீர்மானம்.

லோகங்யாயமும் அப்படித்தான்" என்று கூறவே ஸ்ரீ சாரதாம்பாளும் அதை அங்கீகரிக்க ஆசார்யர் தன்னால் இதர துர்மதங்களை நிரஸனம் செய்து ஸ்தாபிக்கப்பட்ட வைதிகமான அத்வைத ஸித்தாந்தத்தில் எல்லோருக்கும் சிரத்தை யுண்டாவதற்காக ஸர்வக்ஞ பீடத்தில் ஏறினார்.

இவ்விதம் எல்லோராலும் கொண்டாடப்பட்ட பரமாசார்யர் சிருங்ககிரி முதலான ஸ்தலங்களில் ஸுரேச்வரர் முதலான சிஷ்யர்களை ஸ்தாபித்து விட்டு பதரிகாச்ரமம் சென்று பாதஞ்சலர்களுக்குத் தன் பாஷ்யங்களைச் சொல்லி வைத்து கேதாரம் சென்றார். அங்கு குளிர் மிகுதியால் சிஷ்யர்கள் துன்புறுவதைக்கண்டு ஸஹிக்காமல் பரமேசரைப் பிரார்த்தித்து அவருடைய அனுக்ரஹத்தால் உஷ்ண நதியை அங்கே பிரவஹிக்கும்படி செய்தார். ஆசார்யருடைய கீர்த்தியை பிரகாசப்படுத்தும் அந்த நதி இப்பொழுதும விளங்குகிறது.

தேவர்களின் பிரார்த்தனையால் பூமியில் அவதரித்து தேவதைகளுக்கும் மனுஷ்யர்களுக்கும் பரமோபகாரம் செய்த ஆசார்யரை கைலாஸத்திற்கு அழைத்துச்செல்வதற்காக பிரம்மா இந்திரன் முதலான தேவதாகணங்கள் மஹரிஷிகளுடன் கூட ஆகாசத்தில் கூட்டமாக வந்து மந்தாரமலர்களை வர்ஷித்து "ப்ரபோ, தாங்கள் கைலாஸவாஸியான பரமேச்வரன் த்ரிபுரங்களை எரித்தவர். விஷத்தைப்பானம் செய்தவர். உலகத்தின் ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களுக்குத் தாங்கள்தான் காரணம். தேவ மனுஷ்ய ஹிதத்திற்காக பூமியில் அவதரித்தீர். அவதார

காரியம் பூர்த்தியாய் விட்டது. எங்களுடைய லோகத்திற்கு வரவேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

அதை அங்கீகரித்து கைலாஸம் செல்ல வேண்டும் என்று நினைத்த மாத்திரத்திலேயே அங்கு வந்த நந்தியின் மேல் பிரஹ்மாவின் கையைப் பிடித்துக்கொண்டு ஏறி இடை சந்திர கலை விளங்கும் தன் ஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு தேவர்களாலும் மஹரிஷிகளாலும் ஸ்தோத்ரம் செய்யப்படுகிறவராய் தன் ஸ்தானம் சென்றார்.

॥ अष्टमः श्लोकः ॥

पद्मदत्तकरावलम्बनमारुरोह स सर्ववि-
त्पीठमुत्तरदक्षिणो बहुवादिशारदयाऽऽदृतः।
उष्णनद्यवगाहहर्षिनशिष्यपूजितपद्मभू -
नन्दिसेवितसोममूर्तिकृपाश्रयौ रजतागमम् ॥ ८ ॥

॥ व्याख्या ॥

सर्वज्ञपीठारोहाय प्रवृत्तिसमये वादिभिः निरोधः आदरश्च कृत इत्याह — पद्मेति । वादिभिः कृतप्रश्नानां उत्तरदाने दक्षिणः समर्थः । अत एव औत्तरपण्डितानां मध्येऽपि दक्षिणः । दाक्षिणात्यपण्डितानां मध्येऽपि उत्तरः श्रेष्ठः । अत एव बहुवादिभिः सहिता शारदा तया आदृतः आदृतपीठारोहण इत्यर्थः । सर्वज्ञपीठारोहणं सर्वैरनुमोदितमिति यावत् । अपरा योजना — 'बहु स्यां प्रजायेय' इति वदतीति वादी तथाविधकाम-

नावानित्यर्थः । आरः कृतनामा अक्षः तत्स्थानापन्न इत्यर्थः । यथा कृताक्षे विजिते इतरे अक्षा विजिता भवन्ति, तथा एतस्मिन् विजिते सर्वं विजितं भवतीति अस्य कृताक्षस्थानीयत्वमुच्यते । दयाहतः आहतदय इत्यर्थः । एवं परमेश्वरपरतया अर्थान्तरप्रतीतिरपि पूर्ववत् महिमातिशयद्योतनाय भवति । तदङ्गीकारानन्तरं पीठारोहणमाह — पद्मेति । पद्मेन पद्मपादाचार्येण दत्तं करावलम्बनं यस्मिन् कर्मणि तत् यथा तथा सर्ववित्पीठं सर्वज्ञपीठमारुरोह ॥

केदारक्षेत्रे उष्णनदीं प्रवाहयामासेत्याह — उष्णेति । शिष्यहिताय श्रीगुरुप्रार्थितपरमेश्वरानुग्रहात् प्रवृत्तायां उष्णनद्यां अवगाहन मज्जनेन हर्षिताः ये शिष्याः तैः पूजितः स चासौ पद्मभूनन्दिसेवितश्च । पद्मभुवा ब्रह्मणा नन्दिना नन्दिकेश्वरेण च सेवितः । कैलासगमनवेलायां ब्रह्मणा हस्तावलम्बनं दत्तम्, नन्दिकेश्वरेण वहनं कृतम्, एवं ताभ्यां सेवित इत्यर्थः । स चासौ सोममूर्तिश्च । सोमः मूर्तौ यस्य सः, चन्द्रकलावतंस इत्यर्थः । न गच्छतीति अगमः, पर्वतः रजतस्य अगमः रजतागमः तन्मय इत्यर्थः । तं उपाययौ प्राप्तवान् । तं प्रति प्रस्थित इति यावत् ॥

अपरा योजना — उष्णकाले तीव्रतापसमये या नदी मरुमरीचिकारूपा तत्सदृशसांसारिकविषयभोगनद्यां अवगाहन

तदनुभवेन हर्षिताः तत्रैव रताः पूर्वं पश्चात् शिष्याः तच्छिष्यभावं प्राप्ताः तत्सेवापरा इति यावत् । तान् पावयति पवित्रयति शुद्धान्तःकरणान् करोतीति शिष्यपूः अत एव जितपद्मभुवः करोतीति जितपद्मभूः वैराग्यातिशयेन ब्रह्मलोकपर्यन्तं विरक्तान् करोतीत्यर्थः । नन्दयतीति नन्दी, परमानन्दयुक्तान् करोतीत्यर्थः । सेवितसोममूर्तिः सेवितः प्राप्तः सोमः यया तादृशी मूर्तिः यस्य सः । उपायेन यौति मिश्रयति इति उपाययौः ; 'यु मिश्रणे अमिश्रणे च' इत्यनुशासनात् । अजतागमं न जायत इत्यजः षड्भावविकाररहित आत्मा । तस्य भावः अजता तस्या गमं प्राप्तिं प्रति परमात्मस्वरूपप्राप्तिं प्रति च उपायः तेन मिश्रयतीत्यर्थः ॥

ஆசார்யர் ஸர்வக்ஞ பீடத்தில் ஏறும்பொழுது வாதிகள் தடுத்ததையும் பின்னால் அவர்கள் பூஜித்ததையும் கூறுகிறார்:—வாதிகள் கேட்ட கேள்விகளுக்கு பதில் கூறுவதில் ஸமர்த்தரும், வடதேசத்திலும் தென் தேசத்திலுமுள்ள பண்டிதர்களைக் காட்டிலும் மிகச்சிறந்தவருமான ஆசார்யர் அநேகம் வாதிகளாலும் ஸ்ரீசாரதையாலும் ஆதரிக்கப்பட்டவராய் பத்மபாதரால் கொரிக்கப்பட்ட கையைப் பிடித்துக்கொண்டு ஸர்வக்ஞ பீடத்தில் ஏறினார். பிறகு சிஷ்யர்களின் ஹிதத்திற்காகப் பரமேசனை பிரார்த்தித்து அவருடைய அனுக்ரஹத்தால் பிரவஹித்த உஷ்ண நதியில் ஸ்நானம் செய்து துன்பம் விலகி ஸந்தோஷமடைந்த சிஷ்யர்களால் பூஜிக்கப்பட்டவராய் ஹஸ்தாவலம்பம் கொடுத்து பிரஹ்மாவாலும் வாஹனமாகவிருந்து

நந்திகேச்வரராலும் ஸேவிக்கப்பட்டவராய் இந்த ரூபத்தை மறைத்து சந்திரசேகர ஸ்வரூபத்தை எடுத்துக்கொண்டு வெள்ளி மலையான மஹாகைலாஸம் புறப்பட்டுச்சென்றார்.

ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் बहु स्यां प्रजायेय என்று ஸங்கல்பம் செய்து உலகை ஸ்ருஷ்டித்த பரமேசரே ஆசார்ய ரூபமாக வந்தார். சொக்கட்டான் ஆட்டத்தில் கிருதம் என்ற பெயருள்ள காயை ஜயித்தால் மற்ற காய்களும் ஜயிக்கப்படுவது போல பரமேச்வரனை அடைந்தால் எல்லாவற்றையும் அடையலாம். கடும் கோடை காலத்தில் தோன்றுகிற கானல் நீருக்கு ஒப்பான விஷய சுகத்தில் ஈடுபட்டுக் கிலேசம் தாங்காமல் பின்னால் தன்னை அடைந்து ஸேவிக்கின்ற சிஷ்யர்களை ப்ரஹ்மலோகம் வரை எல்லாவற்றிலும் ஆசை நீங்கியவர்களாகச் செய்து மனத்திலுள்ள கல்மஷங்களைப் போக்கி பரமாத்ம ஸ்வரூபத்தை அடைவதற்கு உபாயத்தை உபதேசித்து பரமானந்தமடையும்படி செய்கிறார். ஆசார்யரின் மஹிமை அளவிட முடியாதது.

॥ नवमः श्लोकः ॥

देशिकाष्टकमष्टसिद्धिदमष्टमूर्तिकृतक्रमं
कष्टनाशनमिष्टदायकमष्टदिक्षु सुकीर्तिदम् ।
देशिकाय नमोऽस्तु ते मृतबालजीवदयाम्बुत्र
कारणाय नमोऽस्तु ते परिपूरणाय नमोऽस्तु ते ॥

॥ व्याख्या ॥

एतत्स्तोत्रपठनस्य फलमाह— देशिकेति । इदं देशिकाष्टकं पठितॄणां अष्टसिद्धिदं अणिमाद्यैश्वर्यप्रदम् । यतः अष्टमूर्तिकृतक्रमं अष्टमूर्तिः परमेश्वरः 'अष्टमूर्तिरहिर्बुध्न्यः' इत्यमरः । तेन कृतः लीलासंकल्पक्रमः यस्मिन् तत् । तदवतारभूतभगवत्पादावतारकृत्यक्रमश्च यस्मिन् तत् । तत्प्रेरणया कृतक्रमः श्लोकचतुर्थांशक्रमः यस्मिन् । अष्टाभिः मूर्तिभिः अष्टभिः श्लोकैः कृतः प्रदर्शितः क्रमः चरित्रक्रमः यस्मिन् तत् । कष्टनाशनं दुःखनाशनं । इष्टदायकं इष्टानां दायकम् । इष्टदानां अयानां मध्ये कं शिरस्स्थानीयम् । इदमष्टकं सर्वापेक्षया उत्कृष्टमित्यर्थः । अष्टदिक्षु सुकीर्तिदं, शोभनगुरुचरित्रकीर्तनात् पठिता सर्वश्लाघनीयो भवतीत्यर्थः । अन्तेऽपि मङ्गलमाचरयति—देशिकायेति । गुरवे नमोऽस्तु ते ॥

अर्थान्तरमुच्यते— हे देशिक ! आय अकाररूपाय त भवते नमोऽस्तु । बालाश्च ते जीवाश्च बालजीवाः अज्ञानिन

